

# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)
தொலைநிலைக் கல்வி



# பி.லிட்., தமிழ்

மூன்றாமாண்டு

## தாள் : 2

# நீதி இலக்கியம்

DEC அங்கீகாரம்பெற்றது
www.mkudde.org

**S2813**

# உள்ளடக்கம்


| அலகு | | | | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. | திருக்குறள் | – | இறைமாட்சி, கல்வி | 7 |
| 2. | திருக்குறள் | – | கல்லாமை, கேள்வி, அறிவுடைமை | 19 |
| 3. | திருக்குறள் | – | குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ் சேராமை | 26 |
| 4. | திருக்குறள் | – | தெரிந்து செயல்வகை, வலி அறிதல் | 33 |
| 5. | திருக்குறள் | – | காலம் அறிதல், இடனறிதல் | 38 |
| 6. | நாலடியார் | – | அறிமுகம், செல்வம் நிலையாமை | 46 |
| 7. | நாலடியார் | – | இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை | 52 |
| 8. | பழமொழி நானூறு | | | 63 |
| 9. | நான்மணிக்கடிகை | | | |
| 10. | மூதுரை | | | |

அன்புள்ள மாணவச் செல்வங்களே,

வணக்கம்!

பி.லிட். மூன்றாம் ஆண்டில் சேர்ந்து தமிழ் இலக்கியம் பயில வந்துள்ள உங்களை மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தொலைநிலைக் கல்வித் தமிழ்த்துறை அன்போடு வரவேற்கிறது. இந்த ஆண்டு நீங்கள் ஏழு தாள்கள் படிப்பீர்கள். மூன்றாமாண்டில் சுற்றுச்சூழலியல் என்னும் பாடம் அனைத்துப் பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் பொதுவான பாடமாகும்.

இந்த ஆண்டில் நீங்கள் படிக்க வேண்டிய பாடங்கள் ஏழு. அவை பின்வருமாறு :

| | |
|---|---|
| தாள் 1. | பண்டை இலக்கியம் |
| தாள் 2. | நீதி இலக்கியம் |
| தாள் 3. | இலக்கணம் – 5 : தொல்காப்பியம் – எழுத்ததிகாரம் |
| தாள் 4. | இலக்கணம் – 6 : தொல்காப்பியம் – சொல்லதிகாரம் |
| தாள் 5. | இலக்கணம் – 7 : தொல்காப்பியம் – பொருளதிகாரம் |
| தாள் 6. | மொழிபெயர்ப்பியல் |
| தாள் 7. | சுற்றுச்சூழலியல் |

உங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பாடங்களை நன்கு படியுங்கள். நீங்கள் தானாகவே படித்துப் புரிந்து கொள்ளும் வகையிலேயே பாடங்கள் எளிமையாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. பாடங்களில் உள்ள தன்மதிப்பீட்டு வினாக்களுக்கும், பயிற்சி வினாக்களுக்கும் விடை எழுதிப் பயிலுங்கள். படிக்கும் போது ஐயங்கள் தோன்றின் ஐயத்தைத் தொடர்பு வகுப்புகளில் உங்களுக்குப் பாடம் நடத்த வரும் ஆசிரியரிடம் கேட்டுத் தெளிவு பெறலாம். நன்கு படித்துத் தேர்வில் வெற்றி பெற வாழ்த்துகிறோம். தொடர்பு வகுப்புகளுக்குத் தவறாது வந்து படித்துப் பயன்பெறுக.

பி.லிட்., (தமிழ்) மூன்றாமாண்டு

## தாள் 2 : நீதி இலக்கியம்

# பாடத்திட்டம்

கூறு : 1 : திருக்குறள் – அரசியல், முதல் 12 அதிகாரங்கள்
இறைமாட்சி முதல் இடனறிதல் வரை
– 120 குறட்பாக்கள்

கூறு : 2 : நாலடியார் – அறத்துப்பால் :
துறவறவியல் முதல் 3 அதிகாரங்கள்
செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை,
யாக்கை நிலையாமை – 30 பாடல்கள்

கூறு : 3 : பழமொழி நானூறு
முதல் 20 பாடல்கள் – 20 பாடல்கள்

கூறு : 4 : நான்மணிக்கடிகை
முதல் 20 பாடல்கள் – 20 பாடல்கள்

கூறு : 5 : மூதுரை முதல் 20 பாடல்கள் – 20 பாடல்கள்

# நீதி இலக்கியம்

தமிழ் இலக்கிய உலகில் நீதி இலக்கியம் எனப் பெயர் பெற்றவை பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்! அந்நூல்கள் கூறும் அறங்கள்–நீதிகள் பற்றியதாக இப்பாடம் அமைகின்றது.

திருக்குறள் எழுதப்பட்ட முறைமை, பிற நீதிநூல்களின் இயல்பு முதலியன சுட்டப்படுகின்றது.

மக்கள் கைக்கொள்ள வேண்டிய பண்புகளை–ஆற்ற வேண்டிய செயல்களை எடுத்தோதும் இவை வாழ்வியல் விழுமியங்களை நமக்கு உரைக்கின்றன.

நமக்குப் பாடமாக உள்ள இந்நூற் கருத்துக்கள் படிக்கப்பட வேண்டியவையாக இருப்பதோடு. கடைப்பிடிக்க வேண்டிய அறங்களாகவும் உள்ளன.

இந்த நீதி இலக்கியங்களைக் காண்போம்.

# அலகு 1 : திருக்குறள் - இறைமாட்சி, கல்வி

## அறிமுகம் :

திருக்குறள் பற்றிய அறிமுகம்.

திருக்குறள் பற்றிய செய்திகளை விளக்குவதாக இப்பாடம் அமைகிறது.மேலும், அரசியல் என்ற பகுதியில் இறைமாட்சி, கல்வி ஆகிய அதிகாரக் குறள்களை அறிமுகப்படுத்துகிறது.

## நோக்கம் :

1. திருக்குறள் பற்றிய பொதுவான செய்திகளை அறிதல்.
2. திருக்குறளின் அரசியல் கோட்பாடு பற்றி அறிதல்.
3. இறைமாட்சி அதிகாரத்தின் வழி அரசனுக்கு (தலைவனுக்கு) உரிய தகுதிகளைப் புரிந்து கொள்ளுதல்.
4. கல்வி அதிகாரத்தின் வழி கல்வியின் சிறப்பினைத் தெரிந்து கொள்ளுதல்

## பாட அமைப்பு :

அறிமுகம் :

நோக்கம் :

1.0 திருக்குறள்

- 1.0.1 திருக்குறள் சிறப்பு
- 1.0.2 திருக்குறள் அமைப்பு
- 1.0.3 திருக்குறள் பகுப்பு
- 1.0.4 உலக மொழிகளில் திருக்குறள்
- 1.0.5 திருக்குறள் உரைகள்
- 1.0.6 திருக்குறள் காலம்
- 1.0.7 திருவள்ளுவர்
- 1.0.8 திருவள்ளுவரின் மனைவி
- 1.1.0 திருக்குறளில் அரசியல்

1.1 இறைமாட்சி

1.2 கல்வி

1.3 தன்மதிப்பீட்டு வினாக்கள் - விடைக்குறிப்பு

1.4 வினாக்கள்

# திருக்குறள்

## 1.0.0

சில இலக்கியங்கள் கற்கத் தக்கன. சில இலக்கியங்கள் கற்று உணரத்தக்கன. சில இலக்கியங்கள் கற்றுணர்ந்து வாழ்க்கையில் நடைமுறைப்படுத்தத்தக்கன என்பார் பிரான்சிஸிஸ் பேகன். இவ்வாறான இலக்கிய வரிசையில், கற்று உணர்ந்து வாழ்க்கையில் பின்பற்றத்தக்க நூலாக இலங்குவது திருக்குறள்!

தமிழ் இலக்கிய மரபில் 'திரு' என்ற அடையோடு பெயர் பெற்ற நூல்கள் ஒரு சிலவே ஆகும். அவற்றுள் முதன்மையான நூல் திருக்குறளாகும். மனித சமுதாயத்தை ஆழ்ந்து நோக்கி அச்சமுதாயத்தின் தேவைகளையும் நோக்கங்களையும் பாடுபொருளாகக் கொண்டு எழுதப்பட்ட நூல் திருக்குறள். தமிழ் மொழியின் தன்னிகரற்ற நூலாக இருப்பினும், மொழி, இனம், நாடு, சமயம் முதலியவற்றின் எல்லை கடந்து உலகப்பொதுமை உடையதாக விளங்குகிறது. இவ்வாறு மனிதகுலத்திற்குப் பொதுமையான விழுமியங்களைச் சொல்லுகிற நூல் வேறெந்த மொழியிலும் இல்லை எனலாம்.

## 1.0.1 திருக்குறள் சிறப்பு :

தன்மதிப்பீட்டு வினா
1. 'எல்லாப் பொருளும் இதன் பால் உள' எனப்படும் தமிழ் நீதி நூல் எது?

உலகெங்கிலும் முடியாட்சி நிலவிய காலத்தில் தோன்றிய திருக்குறள், இன்றைய குடியாட்சிக் காலத்திற்கும் பொருத்தமுடையாதாக உள்ளது. எல்லாப் பொருளும் உடையதாகத் திருக்குறள் விளங்குவதனை?

எல்லாப் பொருளும் இதன்பால் உள இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்- சொல்லாற்
பரந்தபா வால்என் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

என்பார் தமிழ்நாகனார். பொதுமையான கருத்துக்கள் பலவற்றையும் உடையதாக வளங்குவதனை

'ஒன்றே பொருளெனின் வெறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறுசமயத்தார்-நன்றென
அப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி'

எனக் கல்லாடர் சுட்டுவதும் எண்ணத்தக்கது.

## 1.0.2 திருக்குறளின் அமைப்பு :

குறள் வெண்பா என்னும் யாப்பமைதியில் திருக்குறள் அமைகிறது. முதலடி நாற்சீராகவும், இறுதி அடி முச்சீராகவும் உள்ளது. ஒன்றே முக்காலடியில் உலகைக் காட்டும் வகையில் அமைகிறது. இவ்வாறான செறிவினை ஔவையார்,

"அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்"

எனப் போற்றுகிறார். யாப்பின் பெயரால் திரு என்னும் அடையோடு சேர்ந்து பெயர் பெறுகிறது.

## 1.0.3 திருக்குறள் பகுப்பு :

அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற முப்பெரும் பகுப்பாக நூல் அமைந்துள்ளது. இதனால் திருக்குறளை முப்பால் என்றும் அழைப்பர். அறத்துப்பாலில் பாயிரம் என்ற பகுதி அமைகிறது.

தன்மதிப்பீட்டு வினா
2. 'முப்பால்' எனப்படும் நூல் எது?

பாயிரம் தவிர, இல்லறவியல், துறவறவியல், ஊழியல் என்ற மூன்று பகுதிகள் அறத்துப்பாலில் இடம் பெறுகின்றன. பொருட்பாலில் அரசியல், அமைச்சியல், அரணியல், கூழியல், படையியல், நட்பியல், குடியியல் என ஏழு பகுதிகள் அமைகின்றன. இன்பத்துப்பாலில் களவியல், கற்பியல் என்ற இருபிரிவுகள் அமைகின்றன. ஒவ்வொரு பகுதியும் பல அதிகாரங்களைப் பெற்றுள்ளது. அறத்துப்பாலில் 38 அதிகாரங்கள், பொருட்பாலில் 70 அதிகாரங்கள், இன்பத்துப்பாலில் 25 அதிகாரங்கள் அமைந்துள்ளன. அதிகாரத்திற்குப் பத்துக் குறள்வீதம் 133 அதிகாரங்களுக்கு 1330 குறள்கள் அமைகின்றன.

தன்மதிப்பீட்டு வினா
3. பொருட்பாலில் எத்தனை அதிகாரங்கள் உள்ளன?

'அகரமுதல' எனத் தொடங்கும் திருக்குறள், 'பெறின்' என்ற சீரோடு முடிகிறது. தமிழின் முதல் எழுத்தாகிய 'அ'கரத்தில் தொடங்கி, இறுதி எழுத்தாகிய 'ன'கரத்தில் முடிவுறுவது திருக்குறள் அமைப்பின் சிறப்பாகும்.

## 1.04 உலக மொழிகளில் திருக்குறள்

உலகில் உள்ள பலமொழிகளிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பைபிளுக்கு அடுத்தபடியாக அதிக அளவில் மொழிபெயர்க்கப்பட்ட நூல் என்பர்.

வீரமாமுனிவர் திருக்குறளை இலத்தீன் மொழியில் மொழிபெயர்த்தார். ஜி.யு.போப் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இம்மொழிபெயர்ப்புகளுள் வ.வே.சு.ஐயர், இராஜாஜி ஆகியோரது ஆங்கில

தன்மதிப்பீட்டு வினா
4. திருக்குறளை இலத்தீனில் மொழிபெயர்த்தவர் யார்?

மொழிபெயர்ப்புக்கள் குறிப்பிடத்தகுந்தவை. சீனமொழி, ஜப்பான், பிரெஞ்சு, ஜெர்மன், உள்ளிட்ட உலக மொழிகளிலும், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி உள்ளிட்ட இந்திய மொழிகளிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

### 1.0.5 திருக்குறள் உரைகள்

திருக்குறளுக்குப் பலமொழிகளில் மொழிபெயர்ப்பு இருப்பதைப் போலப் பல்வேறு உரைகளும் உள்ளன. பரிமேலழகர் தொடங்கி இன்றைய பட்டிமன்றப் புகழ் சாலமன் பாப்பையா வரை பலரும் திருக்குறள் உரையாரிசியர்களாக உள்ளனர். முற்காலத்தில் திருக்குறளுக்கு உரையெழுதிய ஆசிரிர்களை

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிதி பரிமேலழகர் திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவநூற்கு
எல்லையுரை செய்தார் இவர்

எனத் தனிச்செய்யுள் குறிப்பிடுகிறது. இந்த உரையாசிரியர்களுள் பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காளிங்கர் ஆகிய நால்வர் உரைகளே தற்போது கிடைத்துள்ளன. அவற்றுள்ளும் பரிமேலழகர் உரையே தனிச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

தன்மதிப்பீட்டு வினா 5. திருக்குறள் உரையாசிரியர் இருவரைக் குறிப்பிடுக.

தமிழ் மொழியின் சிறந்த நூல்களைச் சுட்டும் அறிஞர்கள் திருக்குறளை ஒரு நூலாகவும் பரிமேலழகர் உரையைப் பிறிதொரு நூலாகவும் கருதிப் பட்டியலிடுகின்றனர்.

வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம் தொல்காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்வுரை-ஒன்றியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் திறம்.

என்ற உமாபதிசிவாச்சாரியாரின் பாடலில் திருக்குறள், திருவாசகம், தொல்காப்பியம், திருத்தொண்டர் புராணம், சிவஞானசித்தியார் இவற்றோடு திருக்குறளுக்கான பரிமேலழகர் உரை தனி நூலாகச் சுட்டப்படுகிறது. இவ்வாறு திருக்குறள் மட்டுமல்லாது அதன் உரைநூலும் தனித்த நூலாகச் சிறப்புறுகின்றது.

## 1.0.6 திருக்குறளின் காலம்

உயர்ந்த பல சிறப்புகளையுடைய திருக்குறளின் காலம் இன்றளவும் ஆராய்ச்சிக்கு உரியதாகவே உள்ளது. பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை போன்றோர் திருக்குறளை 6–ஆம் நூற்றாண்டுக்கு உரியது என்று உரைப்பர். வி.ஆர்.ஆர்.தீட்சிதர் வள்ளுவர் காலத்தை முதல் மூன்று நூற்றாண்டுகளுக்குள் அடக்குகிறார். இராசமாணிக்கனார் கி.மு.1 முதல் கி.மு. 300க்குள் திருக்குறளின் காலத்தை நிர்ணயிக்கிறார்.

மறைமலையடிகள் திருவள்ளுவரை, கிறித்துவுக்கு முப்பது ஆண்டுகளுக்கு முற்பட்டவராகக் கருதுகிறார். மறைமலையடிகளின் கணக்குப்படியே தமிழக அரசும் தமிழர்களும் திருவள்ளுவர் ஆண்டை இன்றளவும் குறிப்பிடுகின்றனர்.

## 1.07 திருவள்ளுவர்

முதற்பாவலர், தெய்வப்புலவர், பெருநாவலர், செந்நாப்போதார், மாதாநுபங்கி என்பன திருவள்ளுவரின் வேறு பெயர்களாகும். திருவள்ளுவர் பற்றிச் செவிவழிக் கதைகள் பல நிலவுகின்றன.

தன்மதிப்பீட்டு வினா
6. திருவள்ளுவரை ஆதரித்த வள்ளல் யார்?

ஆதி, பகவன் என்கிற பெற்றோருக்கு மகனாகப் பிறந்தார் என்றும் அவ்வையார் உடன் பிறந்தவர் என்றும் திருமயிலையில் வாழ்ந்தார் என்றும் ஏலேலசிங்கன் என்ற வணிகர் ஆதரவில் வாழ்ந்தார் என்றும் சுட்டப்படுகிறது. இவ்வாறான கதைகளுக்கு சான்றுகள் ஏதும் இல்லை என்பது குறிப்பிடத்தகுந்தது ஆகும்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தனது நூலைத் திருவள்ளுவர் அரங்கேற்றம் செய்தபொழுது சங்கப் புலவர்களால் மறுக்கப்பட்டு மனம் ஒடிந்து வெளியேறுகிறார். ஔவையார் தலையீட்டால் குறள் மீண்டும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. திருக்குறளைப் பொற்றாமரையானது ஏந்திக்கொண்டு திருக்குளத்தில் இருந்து எழுந்தது. திருக்குறள் உலகத்தாரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருக்குறள் நூல் அரங்கேற்றம் பற்றிய இக்கதையின் உண்மைத் தன்மையை ஆராய்வது ஒருபுறம் இருக்க, இக்கதை, திருக்குறளின் மேன்மையையும், சிறப்பையும் மேம்படுத்துகிறது என்பதில் ஐயமில்லை.

## 1.0.8 திருவள்ளுவரின் மனைவி

திருவள்ளுவரின் மனைவியார் வாசுகி அம்மையார். இவ்விருவர் இல்லறத்தைப் பற்றியும் கதைகள் பல நிலவுகின்றன. திருவள்ளுவர் அழைத்தபொழுது கிணற்றில் நீர் இறைத்த அம்மையார் உடனே

தன்மதிப்பீட்டு வினா
7. திருவள்ளுவரின் மனைவி யார்?

விரைய நீர் சேந்திய தோண்டியும் கயிறும் அந்தரத்தில் அப்படியே நிற்கின்றன. இக்கதை வாசுகி அம்மையாரின் கற்பின் திறத்தைக் காட்டுகிறது என்பர்.

திருவள்ளுவர் உணவு உண்ணும்பொழுது தினந்தோறும் ஒருபாத்திரத்தில் நீரும் ஊசியும் விளக்கும் தனது மனைவியை வைக்கச் சொல்வார். காரணம் கேட்காது நாள்தோறும் அவற்றை வைத்த அம்மையார் சாவின் மடியில் அப்பொருள்களுக்குக் காரணம் கேட்கிறார். உணவுண்ணும்போது சிதறிய பருக்கைகளை ஊசியால் எடுத்து விளக்கின் ஒளியில் பார்த்து, நீரில் சுத்தம் செய்வதற்கு என்று திருவள்ளுவர் விளக்கம் தருகிறார். வாசுகி அம்மையார் உயிர் பிரிந்தது.

இம்மாதிரியான கதைகளுக்கு ஆதாரம் எதுவும் இல்லையென்றாலும், இவை வள்ளுவரின் சிறப்பையும் திருக்குறளின் மேன்மையையும் நிலைநாட்டுதற்கு வழிகோலுகின்றன எனலாம்.

தற்போது பொருட்பாலில் உள்ள ‘அரசியல்’ என்னும் பகுதியில் அமைந்துள்ள இறைமாட்சி முதல் இடனறிதல் வரையிலான 12 அதிகாரங்கள் (39-50) பாடமாக உள்ளன. அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக காண்போம்.

### 1.1.0 திருக்குறளில் அரசியல்

திருக்குறள் தனிமனிதனில் தொடங்கி, குடும்பத்தை உருவாக்கி, சமூகத்தைக் கண்டு, பின் சமூகத்தை நெறிப்படுத்தும் அரசைப் பற்றிப் பேசுகின்றது. சமூக அமைப்பு உருவாகின்றபோதுதான் ஊர், நகரம், நாடு முதலியன தோன்றுகின்றன. “பல குடும்பங்கள் தோன்றிய பிறகு அவை ஒன்றுகூடித் தினசரித் தேவைகளைத் தருவதுடன் நிற்காமல், அதற்கும் மேலான ஒரு பலனை அடையவேண்டும் என்று முயற்சி செய்யுமிடத்துக் கிராமம் உருவாகிறது” என்பார் அரிஸ்டாட்டில்.

திருக்குறளில் சமூகம், சாதி என்ற சொற்கள் இல்லை. குலம், குடி என்ற சொற்கள் உள்ளன. குலம்வேறு; சாதி வேறு. குலம் ஒழுக்கத்தின் வழி வருவது. ‘ஒழுக்கம் உடைமை குடிமை’ என்பது குறள்.

குடும்பம், சமூகம், சமுதாயம் என்ற அமைப்புக்கள் தோன்றிய உடனேயே அரசு தவிர்க்க முடியாத ஒன்றாகி விடுகிறது. ஏனெனில் பலர் கூடி வாழும்போது சிக்கல்கள் தோன்றாமல் இருக்க இயலாது. அது மட்டுமல்ல, சொத்துடைமை வேறு உருவாகிறது. சொத்துடைமை தோன்றிய உடனேயே ஆக்கிரமிப்புகள் நிகழாமல் பாதுகாக்கவும், சொத்துடைமைகளைப் பாதுகாக்கவும் அரசு தோன்றுகிறது என்பார் தமிழ்

மாமுனிவர். அந்த வகையில் பொருட்பாலில் அதிகாரங்களைக் காண்போம்.

### 1.1.0 இறைமாட்சி

அரசன் குடிகளைக் காக்கும் முறைமையை உரைப்பது அரசியல். அப்பகுதியில் அரசனின் சிறப்பை உரைக்கும் பகுதி இறைமாட்சி. 'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே' என்பது ஆழ்வார் கூற்று. 'நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே, மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' (புறம்.186) என்பது தமிழ் நெறி! அவ்வகையில் அரசனின் மாட்சியைக் குறள்வழி காண்போம்.

**1.1.1 படைகுடி கூழ் அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு. (381)**

படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு அங்கங்களையும் உடையவன் அரசருள் ஏறு போல்வான்.

படைப்பெருக்கு, குடிமக்கள், உணவு (கூழ்) நல்ல அமைச்சர், நட்பு நாட்டிற்கு உரிய காவல் ஆகிய ஆறும் அரசனுக்கு உரியனவாகும். இவற்றில் ஒன்று குறைந்தாலும் அரசநீதி செல்லாது என்பர். இந்த ஆறும் உடையவன் அரசரில் சிறப்புடையவன் ஆவான். இறை/அரசன் யார் என்று இக்குறள் சுட்டுகிறது.

**1.1.2 அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தற்கு இயல்பு. (382)**

அஞ்சாமல் இருத்தல், கொடைத்தன்மை, அறிவுடைமை, ஊக்கமுடைமை ஆகிய நான்கும் அரசனுக்குரிய இயல்புகளாக இருத்தல் வேண்டும். உயிர்க்குணங்கள் ஒன்று தோன்றினால், பிறிதொன்று அடங்கிவிடுதல் இயல்பு. ஆயின், அரசருக்கு இந்த நான்கு குணங்களும் குறையாமல் இருத்தல் வேண்டும்.

**1.1.3 தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலன்ஆள் பவற்கு. (383)**

விரைவுடைமை, கல்வி, துணிவுடைமை ஆகிய மூன்றும் நிலத்தை ஆளும் அரசருக்கு நீங்காமல் இருத்தல் வேண்டும்.

செய்கின்ற காரியங்களில் விரைவுடைமை, அதனை அறிதற்கேற்ற கல்வி உடைமை, துணிவு ஆகியனவற்றில் எவையேனும் ஒன்று இல்லாதிருந்தாலும், அரசனுக்குக் கெடுதல் நேரும். ஆகவே, இம்மூன்றையும் நீங்காதவையாக உரைக்கின்றார் வள்ளுவர்.

தன்மதிப்பீட்டு வினா
8. இறைமாட்சி என்றால் என்ன?

தன்மதிப்பீட்டு வினா
9. அரசருள் ஏறு யார்?

தன்மதிப்பீட்டு வினா
10. நிலன் ஆள்பவர்க்கு நீங்காமல் இருக்க வேண்டியவை எவை?

**1.1.4 அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா மானம் உடையது அரசு (384)**

அரசனுக்கு என விதிக்கப்பட்ட அறத்தினின்று வழுவாமல் ஒழுகி, அறனுக்கு மாறானவை நிகழ்ந்தால் அதனைத் தடுத்து, வீரத்தில் தவறாது இருப்பவனே அரசன் ஆவான். அதாவது, அரசன் தான் மட்டும் அறன் உடையவனாய் அன்றி, தன் நாட்டிலும் அறன் தவறாது காத்தல் வேண்டும். அதேபோழ்து, அரசனுக்கு உரியவீரம், குறைவுபடாததாக அறவழிப்பட்டதாக அமைதல் வேண்டும்.

**1.1.5 இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும் வல்லது அரசு. (385)**

பொருள்கள் வரும் வழிகளை மேன்மேல் உளவாக்கலும் அங்ஙனம் வந்த பொருளைத் தொகுத்தலும், தொகுத்த பொருளைப் பிறர் கொள்ளாமல் காத்தலும் காத்தவற்றை அறம் பொருள் இன்பங்களின் பொருட்டு விடுத்தலும் செய்பவனே அரசன்! இந்த நான்கு குறள்களாலும் (2,3,4,5) அரசனது பெருமை குறிப்பிடப்பட்டது.

**1.1.6 காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம். (386)**

தன்மதிப்பீட்டு வினா
11. 'மீக்கூறும் மன்னன் நிலம்' - விளக்குக.

நீதி, நியாயம் வேண்டியர்களுக்கு எளியவனாய்க் காட்சி அளித்தலும், யாரிடத்தும் கடுஞ்சொல் கூறாதவனாய் இருக்கும் மன்னன் ஆளும் நிலம் உலகில் உள்ள நிலங்களில் எல்லாம் உயர்வானது ஆகும். பிறிதோரிடத்தில், 'உறுபசியும் ஓவாப்பிணியும் செறுபகையும் சேராதியல்வது நாடு' என்று கூறுவதும் இங்கு எண்ணத்தக்கது.

**1.1.7 இன்சொல் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால் தான்கண் டனைத்துஇவ் வுலகு. (387)**

இனிய சொற்களுடன் தகுதியுடையவர்க்குப் பொருளை உதவிக் காக்கவல்ல அரசனுக்கு இவ்வுலகம் தன் புகழோடு, அவ்வரசன் கருதியவாறு அமையும்.

**1.1.8 முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப் படும். (388)**

நீதிநெறி வழுவாமல், தனது குடிமக்களைக் காப்பாற்றும் மன்னன் மக்களுக்குக் கடவுள் போலக் கருதப்படுவான்.

**1.1.9 செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்**
**கவிகைக் கீழ்த் தங்கும் உலகு. (389)**

தன்உடன் இருப்பவர்கள் இடித்துக் கூறும் கசப்பான சொற்களையும் பொறுத்துக் கொள்ளும் பண்புடைய அரசனது வெண்கொற்றக் குடையின் கீழ் இந்த உலகம் பலநாள் சிறந்திருக்கும். அதாவது, அத்தகு அரசனுக்குக் கீழ் உலகம் சிறந்திருக்கும்.

**1.1.10 கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்**
**உடையானாம் வேந்தர்க்கு ஒளி. (390)**

வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்தலும், யாவர்க்கும் அருள்செய்தல், முறை தவறாத ஆட்சி, தளர்ந்த தனது குடிமக்களைக் காத்தல் ஆகிய நான்கு செயல்களையும் உடையவன் அரசர்களுக்கு எல்லாம் ஒளியாவான். இந்த ஐந்து குறள்களாலும் (6,7,8,9,10) அரசனின் பெருமையும் அதன் பயனும் குறிப்பிடப்பட்டன.

தன்மதிப்பீட்டு வினா
12. மக்களுக்கு இறை யார்?

தன்மதிப்பீட்டு வினா
13. அரசனுக்கு ஒளி யாது?

**1.2 கல்வி**

அரசனின் மாட்சியைக் குறிப்பிட்டபின், அவன் கற்றற்கு உரிய நூல்களைக் கற்க வேண்டும் என்பதால் அடுத்ததாகக் கல்வி என்னும் அதிகாரத்தை வைத்தார். அரசன் கற்க வேண்டிய நூல்கள் அறநூல், நீதிநூல், யானை, குதிரை, தேர், படைக்கலம் முதலியவற்றின் நூல்கள். அரசன் கல்வியில் சிறந்து இருப்பதனால் அவனுக்கு மட்டுமின்றி, மண்ணுயிர்க்கும் அக்கல்வி அறிவு உரியதாகும்.

**1. 2.1 கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக (391)**

அறம், பொருள், வீடு என்னும் உறுதிப்பொருள் தருவனவற்றைக் கற்க வேண்டும். களவு, காமநூல் முதலியன கற்கும்போது இன்பம் நல்குவன, பிறகு பயன் நல்காதன. இவற்றைத் தவிர்த்து, உறுதிப் பொருள் நல்கும் நூல்களைக் கற்று, கற்றதன் வழியில் நிற்றல் வேண்டும்.

**1.2.2 எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு. (392)**

எண் எனப்படும் கணிதமும் எழுத்தும் ஆகிய இரண்டு கலைகளைக் கற்பவர்கள் உயிர்களில் சிறப்புடையவர்களாகக் கருதப்படுவர். அவர்களே கண் எனப்படுவர்.

தன்மதிப்பீட்டு வினா
14. உயிர்களுக்குக் கண் எது?

தன்மதிப்பீட்டு வினா 15. புலவர் தொழில் எது?

தன்மதிப்பீட்டு வினா 16. எவ்வாறு கல்வி கற்றல் வேண்டும்?

**1.2.3 கண்ணுடையவர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு**
**புண்ணுடையவர் கல்லா தவர். (393)**

தனது நாட்டில் மட்டுமின்றிப் பிறநாட்டில் உள்ளவற்றையும் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்காலத்தில் நிகழ்வனவற்றையும் கல்வியால் ஒருவர் அறிய முடியும். ஆகவே கல்வி கற்றவரே கண்ணுடையவர் எனப்படுவர். கல்வி கல்லாத ஏனையோர், கண்பெற்றாலும் அவை புண்ணே தவிரப் பார்வைப்புலம் தரும் உறுப்பாகிய கண் அன்று.

**1.2.4 உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில். (394)**

தாம் பிறருடன் கலந்து பழகும்போது அவர் மகிழுமாறு பழகி, மற்றுப் பிரியும்போது, அவர் எப்பொழுதும் நம்மையே சிந்திக்குமாறு பிரிதல், கல்வியாற் சிறந்த அறிவினை உடையார் தொழில் ஆகும்.

**1.2.5 உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்**
**கடையரே கல்லா தவர். (395)**

செல்வம் உடையார்முன் சென்று வறியவர் தமக்குப் பொருள் பெற நிற்பது போல, கல்லாதவர் கற்றவர் முன்பு சென்று ஒடுங்கி நின்று விரும்பிக் கற்றல் வேண்டும். மற்றவர்கள்-கல்லாதவர்கள் இழிந்தவர் ஆவர்.

**1.2.6 தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்கு**
**கற்றனைத்து ஊறும் அறிவு. (396)**

மணலில் தோண்டும் போது நீர் ஊறும். அவ்வாறு ஊறும் நீர் தோண்டிய அளவினதாக அமையும். அதுபோல மக்களுக்கும் கல்வி அறிவானது கற்ற அளவினதாகத் தோன்றும்.

இக்குறளில் கேணி என்பது திசைச் சொல். அருவாநாட்டில் வழங்கப்படுவது ஆகும்.

**1.2.7 யாதானும் நாடாமல் ஊராமால் என்னொருவான்**
**சாந்துணையும் கல்லாத வாறு. (397)**

கல்வி கற்றவனுக்குத் தனது நாடும் ஊரும் போலவே பிற ஊரும் நாடும் அமையும். இத்தகு சிறப்புத்தரும் கல்வியைச் சாகும் அளவு ஒருவன் கற்றல் சிறப்புத்தரும். அவ்வாறு கல்லாமல் இருப்பது ஏன்?

**1.2.8 ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து (398)**

ஒரு பிறவியில் ஒருவன் கற்ற கல்வி, அவருக்கு ஏழு பிறவிகளிலும் உதவுவதாக அமையும். உயிரானது வினைவழிப்பட்டது. அவ்வினை போலக் கல்வியும் பிறவிதோறும் தொடரும் தன்மையது. இக்குறளில் எழுமை என்பது தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் ஏழும் ஆகும்.

**1.2.9 தாமின் புறுவது உலகுஇன் புறக்கண்டு**
**காமுறுவர் கற்றறிந் தார். (399)**

கல்வி கற்றவர் தாம் இன்புறுவதற்குக் காரணமாகிய கல்வியால் உலகமும் இன்பம் அடைவதனைக் காண்கின்றனர். அதனால், மேலும் மேலும் கல்வி கற்பதனையே அறிஞர்கள் விரும்புகின்றனர்.

**1.2.10 கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு**
**மாடல்ல மற்றை அவை (400)**

ஒருவருக்கு அழிவில்லாத செல்வமாக அமைவது கல்வியே ஆகும். ஏனைய செல்வங்கள் எல்லாம் அழியக்கூடியவை.

தன்மதிப்பீட்டு வினா
17. "எழுமையும் ஏமாப்புடைத்து" எது?

தன்மதிப்பீட்டு வினா
18. அழியாத செல்வமாக வள்ளுவர் எதனைக் கூறுகிறார்?

## 1.3 தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

1. 1.0.1
2. 1.0.2
3. 1.0.3
4. 1.0.4
5. 1.0.5
6. 1.0.7
7. 1.0.8
8. 1.1.0
9. 1.1.1
10. 1.1.3
11. 1.1.6
12. 1.1.8
13. 1.1.10
14. 1.2.2
15. 1.2.4
16. 1.2.5
17. 1.2.8
18. 1.2.10

## 1.4 வினாக்கள்

1. திருக்குறளின் சிறப்புக் குறித்து எழுதுக.
2. திருக்குறள் அமைப்பினை எழுதுக.
3. திருக்குறளின் பொதுமைத் தன்மையைப் புலப்படுத்துக.
4. உலக மொழிகளில் திருக்குறள் பற்றி உரைக்க.
5. திருக்குறள் உரைகள் பற்றி எழுதுக.
6. திருவள்ளுவர் காலம் பற்றி ஆய்க.
7. திருவள்ளுவர் பற்றிய செவிவழிக் கதைகள் உண்மையானவையா?
8. திருவள்ளுவர் காட்டும் 'அரசு' குறித்து ஆய்க.
9. இறைமாட்சி பற்றிக் கட்டுரைக்க.
10. அரசனுக்கு வேண்டிய ஆறு எவையெவை?
11. அரசனது சிறப்புக்களாக 'இறைமாட்சி' கூறுவன யாவை?
12. அரசனது பெருமையையும் பயனையும் விளக்குக.
13. மக்கட்கு இறை யார்? ஏன்?
14. வேந்தனுக்கு ஒளி எவை எவை?
15. ஒருவருக்குக் கண் எது? புண் எது?
16. கடையர் யார்?
17. 'தொட்டு அனைத்தூறும் மணற்கேணி'- இவ்வுவமை விளக்கும் கருத்து யாது?
18. கேடில் விழுச் செல்வம் எதுவென வள்ளுவம் விளக்குகிறது?
19. திருவள்ளுவரின் கல்விக் கோட்பாட்டை விளக்குக.
20. ஒருவன் சாகுளவும் செய்ய வேண்டியது எது?

# அலகு - 2 : திருக்குறள் - கல்லாமை, கேள்வி, அறிவுடைமை

## அறிமுகம்

கல்லாமை, கேள்வி, அறிவுடைமை ஆகிய மூன்று அதிகாரங்கள் இப்பாடப்பகுதியில் அறிமுகம் ஆகின்றன.

## நோக்கம்

1. கல்வியின் சிறப்பை எதிரிடையாக உணர்த்தும் குறள்களை அறிதல்.
2. அறிவுடைமையின் சிறப்பினைக் குறள் வழி அறிதல்.

## பாட அமைப்பு


2.1 கல்லாமை

2.2 கேள்வி

2.3 அறிவுடைமை

2.4 தன்மதிப்பீட்டு வினாக்கள் – விடைக்குறிப்பு

2.4 வினாக்கள்


## 2.1 கல்லாமை

கல்வியின் சிறப்பைப் பலவாறு கூறியும் முடிவுறாமல், எதிர்மறையாகக் கல்லாமையால் ஏற்படுவனவற்றை இந்த அதிகாரத்துள் சுட்டுகிறார்.

**2.1.1 அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய**
**நூலின்றிக் கோட்டி கொளல். (401)**

அறிவு நிரம்புவதற்குக் காரணமான கல்வியைக் கற்காமல் கற்றறிந்தாரிடம் சென்று பேசுவதன் மூலம் ஒருவர் அறிவினைப் பெறல் இயலாது. அவ்வாறு செய்வது, அரங்கினை இழைக்காமல் வட்டுக்காயை உருட்டி வட்டாடுதலுக்கு ஒப்பாகும்.

தன்மதிப்பீட்டு வினா

1. வட்டாடுதல் எதற்கு உவமையாகின்றது?

**2.1.2 கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. (402)**

கற்றவர்கள் நிரம்பிய அவையில், கல்லாதவன் ஏதாவது ஒன்றைச் சொல்ல முற்படுவது, இயல்பாக முலை இரண்டும் இல்லாதவள், பெண்மையை விரும்புதற்கு ஒப்பாகும்.

**2.1.3 கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின் (403)**

கல்வி கற்றவர் நிரம்பிய சபையில், கல்லாதவர்கள் யாதொன்றும் உரையாமல் பேசாதிருப்பார்களானால், அவர்களும் நல்லவர்களே ஆவர்.

**2.1.4 கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார் (404)**

கல்லாதான் அறிவுடையவனாக இருந்தாலும், அறிவுடைய சான்றோர், அக்கல்லாதவனது அறிவுடைமையை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

தன்மதிப்பீட்டு வினா
2. "கல்லாதவர்கள், நல்லவர்கள்' - எப்போது?

**2.1.5 கல்லா ஒருவர் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். (405)**

கல்லாத ஒருவன் தன்னைத் தானே பெரிதாகக் கொள்ளும் மதிப்பு, கற்றவனோடு உரையாடும்போது கெட்டுவிடும்.

**2.1.6 உளரென்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர். (406)**

கல்வி கற்காதவர்கள் உயிரோடு இருப்பவர்கள் என்று எண்ணுவரே அல்லாமல் அவர்கள் களர் நிலத்துக்கு ஒப்பாவார்கள்.

**2.1.7 நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபவை அற்று. (407)**

நுட்பமான நூல்களைக் கற்று அறிவு பெறாதவனுடைய அறிவு அழகும், எழுச்சியும், சுதையால் ஆக்கப்பட்ட பாவையினுடைய எழுச்சியும் அழகும் போன்றதாகும்.

**2.1.8 நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. (408)**

கல்வி கற்காதவனிடத்துச் சேர்ந்த செல்வமானது கற்றறிந்த நல்லவரிடம் உள்ள வறுமையைவிட மிகுந்த துன்பத்தைத் தரும்.

**2.1.9 மேற்பிறந்தா ராயினும் கல்லதார் கீழ்ப்பிறந்து**
**கற்றார் அனைத்திலர் பாடு. (409)**

கல்லாதவர் உயர்ந்த குடியில் பிறந்தவராக இருப்பினும் தாழ்ந்த குடியில் பிறந்து கல்வி கற்றவர்களை விடப் பெருமை வாய்ந்தவர் அல்லர். அதாவது, தாழ்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் கல்வி கற்றவர்களாக இருப்பவர்கள் பெருமை மிக்கவராவர்.

**2.1.10 விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்**
**கற்றாரோ டேனை யவர். (410)**

அறிவு விளக்குதற்கு அடிப்படையான நூல்களைக் கற்றவர்களோடு கல்லாதவர்கள் இருப்பது, மக்களோடு விலங்குகளுக்கு உள்ள அளவு வேற்றுமை உடையவர் ஆவர்.

இக்குறளில் எதிர்நிரல்நிறை பயின்றுள்ளது என்பர். பரிமேலழகர் இவ்வணியை மயக்கநிரல்நிறை என்பார்.

தன்மதிப்பீட்டு வினா
3. களரனையார் யார்?

தன்மதிப்பீட்டு வினா
4. விலங்கொடு உவமிக்கப்படுபவர் யார்?

## 2.2 கேள்வி

கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டும், அதனால் அறிவுபெற்றும், கல்லாதபோது கேள்வியின் வழி அதனை அறிவதற்கு வழி செய்வதாலும் கல்வி, கல்லாமை அதிகாரங்களின்பின் வைக்கப்பட்டது.

**2.2.1 செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை. (411)**

செவிவழி, கேட்டறியப்படும் அறிவுச் செல்வம், செல்வங்களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. அந்த செவிச் செல்வமே செல்வங்களுக்கெல்லாம் தலையாயது ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
5. தலைமையான செல்வம் எது?

**2.2.2 செவிக்குணவில்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும். (412)**

கேள்விச் செல்வமானது செவிக்கு உணவாகும். அந்த உணவு இல்லாதபோது வயிற்றுக்குச் சிறிதளவு உணவினை உண்ணலாம்.

**2.2.3 செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்**
**ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து. (413)**

செவிக்கு உணவாகிய கேள்விச் செல்வத்தை உடையவர்கள், நிலத்தில் வாழ்பவராக இருந்தாலும், அவியுணவினை ஏற்கும் தேவர்களோடு ஒப்பாவர்.

**2.2.4 கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை. (414)**

ஒருவர் கல்வி கற்காதவர்களாக இருந்தாலும் பரவாயில்லை. ஆனால், கேள்விச் செல்வம் உடையவனாக இருப்பது, ஒருவருக்குத் தளர்ச்சி உற்ற காலத்து ஊன்றுகோல் போல உறுதுணையாக அமையும்.

தன்மதிப்பீட்டு வினா
6. ஒற்கத்தின் ஊற்றாம் துணை எது?

**2.2.5 இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (415)**

ஒழுக்கம் உடைய சான்றோர்களது சொல், வழுக்குதலை உடைய நிலத்தில் நடக்க உதவும் ஊன்றுகோல் போல ஒருவருக்கு வாழ்க்கையில் உதவிவுடையதாக அமையும்.

தன்மதிப்பீட்டு வினா
7. ஊன்றுகோல் எது?

**2.2.6 எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும். (416)**

எவ்வளவு சிறயதாக இருந்தாலும் சிறந்தனவற்றைக் கேட்டறிதல் வேண்டும். சிறியதாக இருந்தாலும் அவை நிறைந்த பெருமையைத் தரும்.

**2.2.7 பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்து**
**ஈண்டிய கேள்வி யவர். (417)**

நுட்பமாக உணரக்கூடிய கேள்வி அறிவை உடையவர்கள் தவறாகப் பொருளை உணர்ந்தாலும் பேதமையானவற்றைக் கூறமாட்டார்கள்.

**2.2.8 கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி. (418)**

இயற்கையான துளைகள் உடையவர்களாக இருந்து கேள்வியறிவால் துளைக்கப்படாத செவிகளை உடையவர்கள் கேள்விப் புலனற்ற செவிட்டுத் தன்மை உடையவர்களே ஆவர்.

தன்மதிப்பீட்டு வினா
8. பெருமை தருவது எது?

**2.2.9 நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது. (419)**

தன்மதிப்பீட்டு வினா
9. தோட்கப்படாத செவி எது எனக் குறள் குறிப்பிடுகிறது?

கல்வியிற் சிறந்த சான்றோர் உரைக்கும் நுண்ணிய கேள்வியை அறியாதவர்கள், வணக்கமுடைய சொற்களைக் கூறுதல் இயலாது.

**2.2.10 செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என். (420)**

சான்றோர் கூறும் சொற்களைத் தம் செவியால் நுகரும் கேள்வி அறிவினைப் பெறாதவர்கள், வாயினால் உண்ணும் உணர்வினை மட்டும் அறிந்தவர்கள் ஆவர். அவர்கள் இறந்தாலும் பயன் ஒன்றுதான்.

தன்மதிப்பீட்டு வினா
10. வாயுணர்வின் மாக்கள் யார்?

**2.3 அறிவுடைமை**

கல்வி கேள்வியால் கற்ற அறிவினோடு இயல்பாகவே அறிவுடையவனாக இருத்தல் அறிவுடைமை கல்வியினும், கேள்வியினும் சிறப்புடைத்து ஆகும்.

**2.3.1 அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்கல் ஆகா அரண். (421)**

அறிவு என்பது அரசருக்கு அழிவு வராமல் பாதுகாக்கும் கருவியாகும். அவ்வாறன்றியும் பகைவர்கள் அழிக்க முடியாத அரணாக – காவலாக உள்ளது எனலாம்.

**2.3.2 சென்ற இடத்தால் செலவிடாதீ தொரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு. (422)**

மனத்தை அது சென்ற இடமெல்லாம் செல்லவிடாது அப்புலத்தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து தீயவற்றை நீக்கி நல்லவற்றின் வழி செலுத்துவது அறிவாகும்.

தன்மதிப்பீட்டு வினா
11. அற்றம் காக்கும் கருவி எது?

**2.3.3 எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு. (423)**

எப்பொருளை யார், யாரிடத்துக் கேட்டறிந்தாலும் அப்பொருளின் உண்மையினைக் காண்பதுவே அறிவுடைமையாகும்.

தன்மதிப்பீட்டு வினா
12. மெய்ப்பொருளை எவ்வாறு காண வேண்டும்?

**2.3.4 எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**
**நுண்பொருள் காண்ப தறிவு. (424)**

தான் பிறருக்குக் கூறுபவற்றை மிக நுட்பமாகப் பிறர் மனங்கொள்ளுமாறு உரைத்தும், பிறர்கூறுபவற்றை நுட்பமாக அறிய முற்படுவதும் அறிவுடைமை ஆகும்.

**2.3.5 உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்**
**கூம்பலும் இல்லது அறிவு. (425)**

உலகத்தில் உள்ள உயர்ந்தவர்களை நட்பாக்கிக் கொள்வது அறிவுடைமை ஆகும். அந்நட்பில் மலர்தலும், கூம்புதலும் இல்லாது நிலையாக இருப்பது உயர்ந்த நட்பாகும்.

**2.3.6 எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு**
**அவ்வது உறைவது அறிவு. (426)**

உலகம் நடைபெறுகின்ற வழியோடு பொருந்திய வகையில் நடப்பதே அறிவுடைமையாகும்.

**2.3.7 அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். (427)**

எதிர்காலத்தில் நடக்கப் போவதனை முன்னே அறியும் ஆற்றல் உடையவர்கள் அறிவுடையர்கள் ஆவார். அறிவில்லாதவர்கள் எதனையும் அறியும் ஆற்றல் இல்லாதவர்கள் ஆவார்.

தன்மதிப்பீட்டு வினா
13. எது பேதமை?

**2.3.8 அஞ்சுவது அஞ்சாமை பேதமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். (428)**

அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சாமல் இருப்பது அறியாமையாகும். அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சுவது அறிவுடையார் செயலாகும்.

தன்மதிப்பீட்டு வினா
14. அதிரவரும் நோய் எது?

**2.3.9 எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய். (429)**

எதிர்காலத்தில் வரவிருப்பவனவற்றை அறிந்து காக்க வல்ல அறிவினை உடையவர்களுக்கு அவர் நடுங்கும்படியான துன்பம் எதுவும் வராது.

தன்மதிப்பீட்டு வினா
15. என்னுடைய ரேனும் இலர் யார்?

**2.3.10 அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். (430)**

அறிவுடையர்கள் பிறிதொன்றும் இல்லாதவராய் இருந்தாலும் எல்லாம் உடையவர் ஆவார். அறிவில்லாதவர்கள் எல்லாம் உடையவராக இருந்தாலும் ஒன்றும் இலாதவராவர்.

## 2.4 தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 2.2.1 | 9. | 2.2.8 |
| 2. | 2.2.3 | 10. | 2.2.10 |
| 3. | 2.1.6 | 11. | 2.3.1 |
| 4. | 2.1.10 | 12. | 2.3.3 |
| 5. | 2.2.1 | 13. | 2.3.8 |
| 6. | 2.2.4 | 14. | 2.3.9 |
| 7. | 2.2.5 | 15. | 2.3.10 |
| 8. | 2.2.6 | | |

## 2.5 வினாக்கள்

1. அறிவுடையார் எதனை ஏற்கமாட்டார்கள்?
2. 'சொல்லாடச் சோர்வு படும்' – எப்போது?
3. 'மண்பாவை' எதனைப் போன்றது என வள்ளுவர் சுட்டுகிறார்?
4. கல்லார் கண் உள்ள செல்வத்தின் தன்மை எது?
5. மேற்பிறந்தாராயினும் கல்லார் நிலை எதுவென வள்ளுவம் குறிப்பிடுகிறது?
6. கல்வியின் சிறப்பை எதிரிடையாக வள்ளுவர் எங்ஙனம் எடுத்துரைக்கின்றார்?
7. கல்லாமையின் இழிநிலை பற்றித் தொகுத்துரைக்க.
8. வயிற்றுக்கு உணவு எப்போது தரவேண்டும்?
9. 'கற்றிலன் ஆயினும் கேட்க' ஏன்?
10. 'வணங்கிய வாயினர் ஆதல்' எப்போது?
11. கேள்விச் செல்வத்தின் சிறப்பினைக் குறள்வழி விளக்குக.
12. அறிவுடைமை என்றால் என்ன? விளக்குக.
13. நன்றின்பால் உய்ப்பது எது?
14. 'உலகம் தழீஇயது ஒட்பம்' – விளக்குக.
15. 'அறிவர் தொழில்' எனக் குறள் குறிப்பிடுவது எது?
16. 'என் குற்றமாகும் இறைக்கு?' என்ற வினா எதனைச் சுட்டுகிறது?
17. யாரிடத்தில் எதிரிகள் சூழ்ச்சி பலிக்காமல் போகும்?
18. 'விலங்கொடு மக்கள் அனைய' என்ற குறளில் என்ன அணி பயின்று வருகிறது?

# அலகு 3 : திருக்குறள் - குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை

அரசனுக்கு வேண்டிய மாட்சியையும் அம்மாட்சியைப் பெற வழியாகக் கல்வியையும் அறிவுடைமையையும் சுட்டுகிறார்.

அரசன் செய்ய வேண்டுவனவகாக் குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ் சேராமை ஆகியவனவற்றைச் சுட்டுகிறார்,

இவை அரசனுக்கு உரியவை எனத் திருக்குறள் குறித்தாலும், ஒவ்வொருவரும் அரசராக உள்ள, குடியரசு அமைப்பில் தனி மனிதன் ஒவ்வொருவருக்கும் இவை வேண்டுவன ஆகும்.

**அறிமுகம்**

அரசன்/தலைவன் செய்ய வேண்டுவனவாகிய குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை ஆகிய அதிகாரங்களை விளக்குவதாக இப்பாடம் அமைகிறது.

**நோக்கம்**

1. அரசனுக்கு உரியனவாகக் குறள் உரைப்பன, இன்றைய குடியாட்சி முறையில் தனிப்பட்ட ஒவ்வொருவருக்கும் வேண்டியன வாகும்.
2. குற்றங்கடிதல் என்ற தலைப்பில் அரசன் காய்தல், உவத்தில் இன்றிச் செயற்படும் முறைமையை உணர்தல்.
3. பெரியார் துணை வெற்றிதரும் எனும் கருத்தைக் குறள்வழி உணர்தல்.
4. யார் யாருடன் பழகுதல் என்பதனைச் 'சிற்றினஞ்சேராமை' அதிகாரத்தின்வழி அறிதல்.

## பாட அமைப்பு

3.1 குற்றங்கடிதல்

3.2 பெரியாரைத் துணைக்கோடல்

3.3 சிற்றினஞ்சேராமை

3.4 தன்மதிப்பீட்டு வினா–விடைக்குறிப்பு

3.5 வினாக்கள்

### 3.1 குற்றங்கடிதல்

அரசன் தன்னிடத்தில் காமம், வெகுளி, பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனையும்அடையாமல் கடிதல் வேண்டும்.

**3.1.1 செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்**
**பெருக்கம் பெருமித நீர்த்து. (431)**

செருக்கும் சினமும் காமமும் ஆகிய குற்றங்கள் இல்லாதவருடைய வாழ்வில் காணும் மேம்பாடு பெருமையுடையது ஆகும்.

**3.1.2 இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா**
**உவகையும் ஏதும் இறைக்கு. (432)**

வேண்டும்போது பொருள் கொடாத தன்மையும் மாண்பில்லாத மானமும் அளவில்லாத மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றம் ஆகும்.

**3.1.3 தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்**
**கொள்வர் பழிநா ணுவர். (433)**

தினைத்துணையாகக் குற்றம் இருந்தாலும் பெரியவர்கள் அதனைப் பனையளவாகக் கருதுவர். அம்மாதிரியான குற்றம் மேலும் வராது காப்பர்.

**3.1.4 குற்றமே காக்க பொருளாக குற்றமே**
**அற்றம் தரூஉம் பகை. (434)**

குற்றமே ஒருவனுக்கு அழிவை உண்டாக்கும் பகையாக உள்ளது. ஆகவே குற்றம் செய்யாமல் இருப்பதனை நோக்கமாகக் கொண்டு அரசன் தன்னைத் தானே காத்துக்கொள்ள வேண்டும்.

**3.1.5 வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்**
**வைத்தூறு போலக் கெடும். (435)**

குற்றம் தன்னை அணுகும் முன்பே காத்துக் கொள்ளாதவன் வாழ்க்கை, எரிமுகத்தில் உள்ள வைக்கோல் போல விரைந்து அழிந்துவிடும்.

**3.1.6 தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்பிற்பின்**
**என்குற்ற மாகும் இறைக்கு? (436)**

அரசன் தன் குற்றத்தை நீக்கிப் பிறகு பிறருடைய குற்றத்தை நீக்க முற்படுவான். அவ்வாறு செய்தால் அரசன் குற்றமற்றவனாகிறான்.

தன்மதிப்பீட்டு வினா
1. யாருடைய வாழ்க்கை மேம்பாடு, பெருமை உடையதாகிறது?

தன்மதிப்பீட்டு வினா
2. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை என்னாகும்?

**3.1.7 செயற்பால செய்யாது இவறியான் செல்வம்**
**உயற்பாலது அன்றிக் கெடும். (437)**

செய்ய வேண்டியவற்றைச் செய்யாது இருக்கும் அரசனது செல்வம், பகைவர்கள் கெடுதல் இல்லாமல் தானாகவே கெடும்.

**3.1.8 பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்**
**எண்ணப் படுவதொன்று அன்று. (438)**

பொருள்களிடத்து மிகவும் பற்றுடையவன் ஆக ஈயாத்தன்மையோடு இருக்கும் அரசனது குற்றம் வேறு எந்த வகைக் குற்றத்திலும் சேராமல் தனித்து இருக்கக்கூடிய பெருங்குற்றமாகும்.

தன்மதிப்பீட்டு வினா
3. உயற்பாலது அன்றிக் கெடும் - எது?

தன்மதிப்பீட்டு வினா
4. 'நயவற்க!' எதனை?

**3.1.9 வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க**
**நன்றி பயவா வினை.**

எக்காலத்திலும் தன்னைப் பெரிதாக எண்ணி வியந்து மதிக்கக் கூடாது. மேலும் அரசனானவன் நன்மை தராதபிற செய்லகளைச் செய்ய விரும்பவும் கூடாது.

**3.1.10 காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்**
**ஏதில ஏதிலார் நூல். (440)**

தான் விரும்பிய பொருள்களைப் பிறர் அறியாமல் நுகர வல்லவனிடம் பகைவர்கள் செய்யும் வஞ்சனைகள், சூழ்ச்சிகள் பலிக்காமல் போகும்.

## 3.2 பெரியாரைத் துணைக்கோடல்

தம்மைவிடப் பெரியவர்களைத் துணையாகக் கொள்ளுதல், கல்வி, கேள்விகளில் வல்லவனாகக் குற்றமற்ற அரசன் பெரியவர்களான அறிவுடையாரைத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

**3.2.1 அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை**
**திறன் அறிந்து தேர்ந்துகொளல். (441)**

அறத்தின் நுட்பத்தை அறிந்த மூத்த அறிவுடையாரது நட்பினை அதன் அருமை உணர்ந்து அரசன் பெற்றுக்கொள்ளுதல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
5. திறன் அறிந்து எதனைத் தேர்ந்து கொளல் வேண்டும்?

**3.2.2 உற்றநோய் நீக்கி உறாஅமை முன்காக்கும்**
**பெற்றியார்ப் பேணிக் கொளல். (443)**

ஏற்கனவே வந்துள்ள துன்பத்தை நீக்கி, இனி எதிர்காலத்தில் துன்பம் வராதபடி முன்னதாகவே காக்கவல்ல அறிவுடையர்களைப் போற்றி நட்புக்கொள்ள வேண்டும்.

**3.2.3 அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். (443)**

அறிவுடைய பெரியவர்களைப் போற்றித் தமக்குச் சுற்றத்தாராக்கிக் கொள்ளுதல், பெறத்தக்க அரிய பேறுகள் எல்லாவற்றிலும் மிக உயர்ந்ததாகும்.

தன்மதிப்பீட்டு வினா
6. 'அரியவற்றுள் எல்லாம் அரிது' - எது?

**3.2.4 தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை. (444)**

ஓர் அரசன் தன்னைவிட அறிவு முதலியவற்றால் உயர்ந்தவர்களாக உள்ளவர்களைப் பேணித் தனக்குச் சுற்றத்தாராக ஆக்கிக் கொள்ளுதல் பெறத்தக்க அரிய பேறுகள் பலவற்றுள்ளும் தலை சிறந்ததாகும்.

தன்மதிப்பீட்டு வினா
7. வன்மையுள் எல்லாம் தலையாயது எது?

**3.2.5 சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். (445)**

எல்லாவற்றிற்கும் தகுதியான வழிகளை ஆராய்ந்து கூறும் அறிஞர்களை உலகம் கண்ணாகக்கொண்டு நடத்தும். அரசனும் அத்தகைய பெரியவர்களை ஆராய்ந்து நட்பாகக் கொள்ளுதல் வேண்டும்.

**3.2.6 தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்தது இல். (446)**

தக்க பெரியாரின் கூட்டத்தில் உள்ளவனாய் நடக்கவல்ல ஓர் அரசனுக்கு, அவனுடைய பகைவர் செய்யக்கூடிய தீங்கு ஏதும் இல்லை.

**3.2.7 இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர். (447)**

தீயவற்றைக் கண்டால் இடித்து உரைக்கும் அறிவுடையார்களைத் துணையாகக் கொள்ளும் அரசனைக் கெடுக்கும் பகைவர் யாரும் இல்லை.

**3.2.8 இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும். (448)**

தவறு செய்கிறபோது கண்டித்துப் பேசி அறிவுரை சொல்கிற பெரியோர்களைத் துணையாகக் கொள்ளாத அரசன் பகைவர்களால் கெடுக்கப்படாமல் தானே கெடுவான். ஆகவே, குற்றம் கடியும் பெரியாரைத் துணைக்கோடல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
8. கெடுக்கும் தகைமை அற்றவராதல் எப்போது?

தன்மதிப்பீட்டு வினா
9. சார்பிலார்க்கு எது இல்லை?

**3.2.9 முதல்இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்**
**சார்பு இலார்க்கு இல்லைநிலை. (449)**

தமது வணிகத்தில் முதல் இல்லை என்றால் அவ்வணிகத்தில் இலாபம் ஏதும் இல்லை. அதுபோல தம்மைத் தாங்குவதாம் துணையில்லாத அரசருக்கு அதனால் வரும் நிலைபேறு கிட்டாமல் போய்விடும். அதாவது, பெரியோரைத் துணைக்கொண்டு நிலைபெறல் வேண்டும்.

**3.2.10 பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே**
**நல்லார் தொடர்கை விடல். (450)**

நல்லவர்களாகிய பெரியோர்களின் தொர்பைக் கைவிடுதல் பலருடைய பகையைத் தேடிக்கொள்வதைவிடப் பத்துமடங்கு தீமை தருவதாகும். ஆகவே, பெரியோரைத் தொடர்ந்து கைக்கொள்ளுதல் அரசனுக்கு உகந்தது ஆகும்.

## 3.3 சிற்றினம் சேராமை

நல்லன அறியாதாராகிய சிறிய இனத்தாரோடு சேராது இருத்தல் வேண்டும். பெரியார் துணையாயினாலும் சிறியாரோடு இணங்கி இருந்தால், அது தீமை பயக்கும் செயலாகும்.

**3.3.1 சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாச் சூழ்ந்து விடும். (451)**

நன்னெறிக்கு உரியராக இல்லாத சிறியாரைத் தன் துணையாகக் கொள்ளப் பெரியோர் அஞ்சுவர். ஆனால், சிறியவர்கள் சிற்றினத்தாரைத் தமது சுற்றமாகக் கொள்வார்கள்.

தன்மதிப்பீட்டு வினா
10. பெரியார் எதற்கு அஞ்சுவர்?

தன்மதிப்பீட்டு வினா
11. நிலத்தியல்பாம் நீர்? எதற்கு உவமை ஆகிறது?

**3.3.2 நிலத்தியல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு. (452)**

நிலத்தின் இயல்பினை அதில் பெய்யும் நீர்பெறும். அதுபோல, மனிதர்களுக்குத் தமக்கு இயல்பாகிய அறிவும் தாம் சார்ந்திருக்கக்கூடிய இனத்திற்கு உரிய இயல்பாக அமையும்.

**3.3.3 மனத்தான்ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தான்ஆம்**
**இன்னான் எனப்படும் சொல். (453)**

மனிதனுக்கு இயற்கை அறிவு மனத்தால் ஏற்படும். இப்படிப்பட்டவன் என்ற உலகத்தாரால் மதிக்கப்படும் சொல், அவர்கள் சேருகின்ற இனத்தால் ஏற்படும்.

**3.3.4 மனத்து உளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துஉள தாகும் அறிவு. (454)**

ஒருவனுக்கு உண்டாகும் அறிவு முதலில் மனத்தில் உள்ளது போலத் தோன்றும். ஆனால் உண்மையில் அவனது அறிவு அவன் சேர்ந்த இனத்தினால் ஏற்படுவது ஆகும்.

**3.3.5 மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். (455)**

தன்மதிப்பீட்டு வினா
12. இனந்தூய்மை தருவது எது?

ஒருவருக்கு மனத்தின் தூய்மையும் செய்யும் செயலின் தூய்மையும் அவர் சேருகின்ற இனத்தின் தூய்மையால் ஏற்படும். ஆகவே அரசன் நல்லினத்தாரோடு சேருதல் இன்றியமையாததாகும்.

**3.3.6 மனம்தூயார்க்கு எச்சம்நன் றாகும் இனம்தூயார்க்கு
இல்லைநன்று ஆகா வினை. (456)**

மனம் தூய்மையாகப் பெற்றவர்க்கு அவருக்குப் பின் எஞ்சி நிற்கும் புகழ் முதலியவை நன்மையாகும். இனம் தூய்மையாக உள்ளவர்க்கு நன்மையாகாத செயல்கள் இல்லை.

**3.3.7 மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தகும். (457)**

தன்மதிப்பீட்டு வினா
13. எச்சம் நன்றாதல் எப்போது?

மனத்தின் நன்மையான எண்ணங்கள் உலகத்து உயிர்களுக்கு நன்மையாகும். சேருகின்ற இனத்தின் நலம் எல்லாப் புகழையும் தரும்.

**3.3.8 மனநலம் நன்கு உடையரா யினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப்பு உடைத்து. (458)**

தன்மதிப்பீட்டு வினா
14. மனநலத்தால் ஆவது எது?

நல்ல மனம் உடைமை என்பது சான்றோர்க்குச் சிறப்புத் தரும். அதனைவிடச் சேருகின்ற இனத்தின் நன்மை மேலும் நல்ல காவலாக அமைவது ஆகும்.

**3.3.9 மனநலத்தின் ஆகும் மறுமை மற்றஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து. (459)**

தன்மதிப்பீட்டு வினா
15. நல்லினத்து ஊங்கும் துணை எதனை நல்கும்?

ஒருவருக்கு மனநன்மையால் மறுமை இன்பம் உண்டாகும். அதுபோழ்து இனம் நன்றாக இருப்பது மேலும் சிறப்புடைமை ஆகும்.

**3.3.10 நல்லினத்தின் ஊங்கும் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். (460)**

ஒருவர்க்கு நல்ல இனத்தாரோடு சேருதல் உலகில் மிக்க துணையானதாக அமையும். தீய இனத்தாரோடு சேருதல் மிக்க பகை உடையது ஆகும்.

## தன் மதிப்பீட்டு வினாவிடைக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 3.1.1 | 9. | 3.2.9 |
| 2. | 3.1.5 | 10. | 3.3.1 |
| 3. | 3.1.7 | 11. | 3.3.2 |
| 4. | 3.1.9 | 12. | 3.3.5 |
| 5. | 3.2.1 | 13. | 3.3.6 |
| 6. | 3.2.3 | 14. | 3.3.7 |
| 7. | 3.2.4 | 15. | 3.3.10 |
| 8. | 3.2.7 | | |

## வினாக்கள்

1. 'குற்றங்கடிதல்' என்ற தலைப்பில் குறள் கூறுவன யாவை?
2. அரசனுக்குக் குற்றமானவை (ஏதம்) எவை?
3. எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடுவது எது?
4. இறைக்குக் குற்றமாவது எது?
5. 'ஏதில ஏதிலார் நூல்' எது எனக் குறள் எதனைக் கூறுகிறது?
6. திறன் அறிந்து எதனைத் தேர்ந்து கொளல் வேண்டும்?
7. 'சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்' என வள்ளுவர் கூறுவது எது?
8. இடிப்பாரை இல்லாத ஏமாரா மன்னரின் நிலை யாது?
9. முதல் இல்லாரைச் சுட்டிக் குறள் குறிப்பிடுவது எதனை?
10. மனத்தாலும் இனத்தாலும் ஆவன எவை?
11. இனந்தூய்மை தருவன எவை?
12. எல்லாப்புகழும் தருவது எது?
13. சான்றோர்க்கு இனநலனால் யாது பயன்?
14. தீயினத்தினால் ஏற்படுவது எது?
15. சிற்றினஞ் சேராமையில் வள்ளுவர் குறிப்பிடும் கருத்துக்களைத் தொகுத்தெழுதுக.

# அலகு 4 : திருக்குறள் - தெரிந்து செயல்வகை, வலியறிதல்

தெரிந்து செயல்வகை என்ற அதிகாரம் அரசன் ஆற்றவேண்டிய கடமைகளைத் தக்கவாறு செய்தற்கு அறிவுறுத்துகிறது.

தன் வலிமையை அறிவதோடு எதிரியின் வலிமையையும் அறிந்து அரசன் செயலாற்றல் வேண்டும்.

அரசருக்கு உரிய செயற்பாடுகளை எடுத்தோதும் இவ்வதிகாரக் கருத்துக்களை இப்பாடம் வழி அறிந்துகொள்வோம்.

**அறிமுகம்**

அரசன் ஆற்ற வேண்டிய கடமைகளைத் தெரிந்து செயல்படுத்துதலையும், தன் வலியோடு, மாற்றார் வலி அறிதலையும் குறள் வழி விளக்குவதாக இப்பாடம் அமைகிறது.

**நோக்கம்**

1. அரசனது / தலைவனது செயல்கள் முறைப்படுத்த வேண்டியவை என்பதனைக் குறளின் 'தெரிந்து செயல்வகை' அதிகாரம் வழி அறிதல்.
2. தனது வலிமையை அறிவதோடு மாற்றார் கவலிமையை அறியும்போது வெற்றி கிடைக்கும் என்பதனை 'வலிஅறிதல்' அதிகாரக் குறள் வழி அறிதல்.

## பாட அமைப்பு

4.1 தெரிந்து செயல்வகை

4.2 வலி அறிதல்

4.3 தன்னறி வினா-விடைக்குறிப்புகள்

4.4 வினாக்கள்

## தெரிந்து செயல்வகை

அரசன் தான்செய்யும் வினைகளை ஆராய்ந்து, அச்செயலைச் செய்ய வேண்டும். கல்வி, கேள்விகளால் வல்லவனாக அறிவுடையவனாகக் குற்றம் கடிந்து அறிவுடைய சான்றோரைத் துணையாகக் கொண்டு, சிற்றினம் சேராமல் ஒழுகும் அரசன் வினை செய்யுங்காலத்து எண்ணிச் செயல்படல் வேண்டும்.

**4.1.1 அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்**
**ஊதியமும் சூழ்ந்து செயல். (461)**

ஒரு செயலைத் தொடங்கும் முன் அச்செயலால் ஏற்படும் அழிவையும், அழிந்தபின் ஏற்படும் ஆக்கத்தையும், பின்னர் ஏற்படும் பயனையும் ஆராய்ந்து செயல்பட வேண்டும்.

**4.1.2 தெரிந்த இனத்தொடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு**
**அரும்பொருள் யாதொன்றும் இல். (462)**

ஒரு செயலைச் செய்து முடிப்பதற்கு அதனைச் செய்து முடிக்க வல்லவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களோடு இணைந்து தாமும் எண்ணிப் பார்த்துச் செயல் செய்கிறவர்களுக்கு அரிய செயல் ஏதும் இல்லை.

தன்மதிப்பீட்டு வினா
1. ‘அரும்பொருள் யாதொன்றும் இல்’ - விளக்குக.

தன்மதிப்பீட்டு வினா
2. பாத்திப்பகுப்பது போன்றது எது?

**4.1.3 ஆக்கம் கருதிமுதல் இழக்கும் செய்வினை**
**ஊக்கார் அறிவுடை யார். (463)**

பின்னர் விளைகின்ற பயனைக் கருதி இப்போது உள்ள முதலை இழக்கும் செயலை அறிவுடையார் செய்யமாட்டார்கள்.

**4.1.4 தெளிவு இலதனைத் தொடங்கார் இளிவுஎன்னும்**
**ஏதப்பாடு அஞ்சு பவர். (464)**

இழிவினைத் தரும் குற்றத்திற்கு அஞ்சுகின்றவர்கள் இன்னபயன் தரும் என்ற தெளிவு இல்லாத செயலைச் செய்யமாட்டார்கள்.

**4.1.5 வகையறச் சூழாது எழுதல் பகைவரைப்**
**பாத்திப் படுப்பதோர் ஆறு. (465)**

வெற்றி பெறும் வழிகளை முழுவதும் ஆராயாமல் போருக்குச் செல்லுதல் பகைவரை நிலைபெறச் செய்வதோர் வழியாகும்.

**4.1.6 செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க**
**செய்யாமை யானும் கெடும். 466)**

செய்யத்தகாத செயல்களைச் செய்வதால் ஒருவன் கெடுவான். செய்ய வேண்டிய செயல்களைச் செய்யமையாலும் கெடுவான்.

**4.1.7 எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்**
**எண்ணுவம் என்பது இழுக்கு. (467)**

அரசன் செய்கின்ற செயல்களைத் துணிந்து ஆற்றவேண்டும். செய்யும்போது பார்த்துக் கொள்ளலாம் என எண்ணுவது தவறானது ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
3. எதனை எண்ணுவது இழுக்கு?

**4.1.8 ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று**
**போற்றினும் பொத்துப் படும். (468)**

சரியான வழியில் முயற்சி செய்யப்படவில்லை எனில், பலர் துணையாக நின்றாலும் அந்தச் செயல் குறைபட்டதாகிவிடும்.

**4.1.9 நன்றுஆற்ற லுள்ளும் தவறுஉண்டு அவரவர்**
**பண்பறிந்து ஆற்றாக் கடை. (469)**

அரசனானவன் நன்மை செய்யும்போது, அவரவர் தன்மை அறிந்து செய்ய வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால், குற்றம் வந்து சேரும்.

தன்மதிப்பீட்டு வினா
4. தவறு உண்டு எது?

**4.1.10 எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு**
**கொள்ளாத கொள்ளாது உலகு. (470)**

அரசன் தான் செய்யும் செயலைப் பிறர் இகழாதவாறு மனம் ஒப்பச் செய்தல் வேண்டும். மற்றும் உலகம் இகழும் செயலை உயர்ந்தோர் கண்ணுறும் வழி, செய்தல் கூடாது.

தன்மதிப்பீட்டு வினா
5. கொள்ளாதது எது?

## 4.2 வலி அறிதல்

தன்னுடைய வலிமையையும் மாற்றார் வலிமையையும் அரசன் அறிதல் வேண்டும். அதனை இவ்வதிகாரம் சுட்டுகிறது.

**4.2.1 வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்**
**துணைவலியும் தூக்கிச் செயல். (471)**

தான் செய்யும் செயலின் வலிமை, தனது வலிமை, மாற்றார் வலிமை, தனக்கும் மாற்றாருக்கும் துணை செய்வாரது வலிமை ஆகியவற்றை ஆராய்ந்து செயல்பட வேண்டும்.

**4.2.2 ஒல்வது அறிவது அறிந்ததன் கண்தங்கிச்**
**செல்வார்க்குச் செல்லாதது இல். (472)**

தன்னால் இயன்ற செலைச் செய்து அதற்கு வேண்டிய வலிமையை உணர்ந்து எப்பொழுதும் மனமொழி மெய்தனை அச்செயலில் வைத்துப் பகைமேற் செல்லும் அரசருக்கு இயலாத செயல் ஏதொன்றும் இல்லை.

தன்மதிப்பீட்டு வினா
6. விரைந்து கெடுபவன் யார்?

**4.2.3 உடைத்தும் வலிஅறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். (473)**

தம்முடைய வலிமையின் அளவு அறியாமல், ஒரு செயலைத் தொடங்கி, இடையில் அதனை முடிக்க வகையில்லாமல் அழிந்தவர் பலராவர்.

**4.2.4 அமைந்தாங்கு ஒழுகான் அளவுஅறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். (474)**

அயல்வேந்தர் / பிறரோடு ஒத்து நடக்காமல், தனது வலிமையையும் அறியாமல், தன்னை வியந்து அவர்களோடு பகைத்த அரசன் விரைவில் கெடுவான்.

தன்மதிப்பீட்டு வினா
7. எப்போது வண்டியின் அச்சிறும். ஏன்?

**4.2.5 பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். (475)**

மயிலிறகு ஏற்றிய வண்டியே ஆனாலும் அளவிற்கு அதிகமாக இருந்தால் வண்டியின் அச்சும் முறியும். அதுபோல காவல் மிகுந்த அரண் இருந்தாலும் பகை அதிகரித்தால் அரண் தாங்காது.

**4.2.6 நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து தூக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும். (476)**

மரத்தின் கிளை நுனியில் ஏறியவர்கள், அதற்கு மேலும் ஏறமுயன்றால் அதுவே அவரது உயிர்க்கு இறுதியாக அமைந்துவிடும். அதுபோன்று ஒருவன் பகைவர்களை எதிர்ப்பவர்கள் ஓர் அளவோடு நிறுத்தாமல், மேலும் மேலும் செல்வாராயின் அது வினைமுடிவிற்கு வழியாகாமல், உயிர் முடிவிற்கு வழி ஆகிவிடும்.

தன்மதிப்பீட்டு வினா
8. பொருள் வழங்கும் நெறி எது?

**4.2.7 ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. (477)**

பிறருக்குத் தரும் பொருளளவறிந்து பொருளை நல்க வேண்டும். அதுவே பொருளைப் போற்றி வாழும் நெறியாகும்.

தன்மதிப்பீட்டு வினா
9. கேடில்லாதது எது?

**4.2.8 ஆகாறு அளவிட்டிது ஆயினும் கேடுஇல்லை
போகாறு அகலாக் கடை. (478)**

பொருள் ஈட்டுகின்ற வழி சிறிதாயினும் கேடில்லை. அப்பொருள் போகும்வழி பெரிதாக இல்லாமல் இருத்தல் வேண்டும்.

**4.2.9 அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல இல்லாகித் தோன்றாக் கெடும். (479)**

தனது வருவாயின் அளவு அறிந்து வாழாதவன் வாழ்க்கை பலவளமும் இருப்பதுபோலத் தோன்றினாலும், இல்லாமல் மறைந்து விடும்.

தன்மதிப்பீட்டு வினா
10. அளவறிந்து வழாதான் வாழ்க்கை என்னாகும்?

**4.2.10 உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை வளவரை வல்லைக் கெடும். (480)**

தனது பொருளின் அளவை ஆராய்ந்து அறியாது செலவு செய்பவர் செல்வம் விரைவாக அழிந்துவிடும் தன்மையது ஆகும்.

## 4.3 தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 4.1.2 | 6. | 4.2.4 |
| 2. | 4.1.5 | 7. | 4.2.5 |
| 3. | 4.1.7 | 8. | 4.2.7 |
| 4. | 4.1.9 | 9. | 4.2.8 |
| 5. | 4.1.10 | 10. | 4.2.9 |

## 4.4 வினாக்கள்

1. தெரிந்து செயல்வகை என்ற தலைப்பில் குறள் கூறுவன யாவை?
2. வழிபயக்கும் செயலாக வள்ளுவம் உரைப்பன எவை?
3. ஏதப்பாட்டுக்கு அஞ்சுபவர் எதனைச் செய்யார்?
4. 'பாத்திப் படுப்பது' என்றால் என்ன?
5. கெடுதல் எவ்வெதனால் ஏற்படுகிறது எனக் குறள் சுட்டுகிறது?
6. அவரவர் பண்பறிந்து செயல்படுவது எது?
7. எந்தெந்த வலிமைகளை அரசன் அறிதல் வேண்டும்?
8. 'பீலிபெய் சாகாடும்' என்ற உவமைவழிப் புலப்படுத்தப் படுவது எது?
9. 'நுனிக்கொம்பர் ஏறினார்' – விளக்குக.
10. வளவரை வல்லைக் கெடும் ஏன்?

# அலகு 5 : திருக்குறள் - காலம் அறிதல், இடனறிதல்

## அறிமுகம்

அரசன் தக்க காலமும் இடமும் அறிந்து செயல்பட வேண்டும் என்பதனைக் குறள் வழி விளக்குவதாக இப்பாடம் அமைகிறது.

## நோக்கம்

1. மாற்றார் வலி அறிதலோடு அரசன் தக்க காலம் அறிந்து செயல்பட வேண்டும் என்பதனை அறிதல்.
2. தக்க இடத்தில் செயல்பட வேண்டும் என்பதனைக் குறள் வழி அறிதல்.

## பாட அமைப்பு

5.1 காலம் அறிதல்

5.2 இடன் அறிதல்

5.3 கட்டுரை வினா–விடை

5.4 தன்மதிப்பீட்டு வினா–விடைக் குறிப்புகள்

5.5 வினாக்கள்

### 5.1.0 காலமறிதல்

வலிமையை அறிந்த அரசன் வினைசெய்யும் காலமும் அறிந்து செயல்பட வேண்டும்.

**5.1.1 பகல்வெல்லும் கூகையைக் காக்கை; இகல்வெல்லும்**
**வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (481)**

காக்கையானது தன்னைவிட வலிய கோட்டானைப் பகலில் வென்றுவிடும். அதுபோல, வெல்லக்கருதும் அரசன் ஏற்ற காலத்தை அறிந்து செயல்படவேண்டும்.

**5.1.2 பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு. (482)**

தகுந்த காலம் அறிந்து அரசன் செயலாற்றுவது நிற்கா இயல்பு உடைய செல்வத்தை நிலை நிறுத்தும் கயிறு போன்றதாகும்.

**5.1.3 அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின். (483)**

ஆற்ற வேண்டிய செயலினை முடிப்பதற்கு வேண்டிய கருவிகளுடன் தக்க காலத்தையும் அறிந்து செயலாற்றினால், முடியாத செயல் எதுவுமில்லை.

**5.1.4 ஞாலம் கருதினும் கைகூடும், காலம்
கருதி இடத்தால் செயின். (484)**

தக்க இடத்தில் காலம் அறிந்து செயலாற்றினால், இந்த உலகத்தையே விரும்பினாலும், அது நம் கைக்கு வந்து சேரும்.

**5.1.5 காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர். (485)**

உலகத்தைத் தமது உடைமையாகக் கொள்ளக் கருதுபவர், தக்க காலத்தை எதிர்நோக்கி இருப்பர்.

**5.1.6 ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து. (486)**

வலிமை மிகுதி உடைய அரசன் பகைவன்மீது போர் தொடுக்காமல், காலம் பார்த்திருக்கின்ற செயல், போரிடும் ஆட்டுக்கிடாயானது, பின்வாங்கி முன்னே பாயும் செயல்போன்றது ஆகும்.

**5.1.7 பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர். (487)**

அறிவுடையவர்கள் பகைவர் தீங்கு செய்த பொழுதே தமது கோபத்தை வெளிப்படுத்த மாட்டார்கள் தக்க காலம் வரை காத்திருந்து, வெல்லும் காலத்தில் தம் உள்ளத்தில் சினம் கொள்வார்கள்.

**5.1.8 செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை. (488)**

பகைவர் நன்னிலையில் இருக்கும் காலம் எனில், அவரைத் தலையாலே தாங்குதல் வேண்டும். அவருக்கு இறுதிக்காலம் எனில், அவர் தலைதானே கீழே விடும்.

தன்மதிப்பீட்டு வினா
1. 'பருவத்தோடு ஒட்ட ஒழுகல்!' குறிப்பிடுவது எதனை?

தன்மதிப்பீட்டு வினா
2. அருவினை ஏதும் உண்டா?

தன்மதிப்பீட்டு வினா
3. காலம் கருதி இருப்பது எது?

தன்மதிப்பீட்டு வினா
6. ஒள்ளியவர் யார்?

தன்மதிப்பீட்டு வினா
7. செய்தற்கு அரிய செயல் எது?

**5.1.9 எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே**
**செய்தற்கு அரிய செயல். (489)**

பகையை வெல்லக் கருதும் அரசன், தான் வெல்வதற்கு உரிய காலம் வருமானால், அக்காலம் முடிவதற்கு முன்னே தன்னால் இ யலும் அரிய வினைகளைச் செய்தல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
8. கொக்கின் வழி வள்ளுவர் எதனைப் புலப்படுத்துகிறார்?

**5.1.10 கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த இடத்து. (490)**

அரசன் தனக்கு ஏற்றகாலம் வருமளவும் கொக்கு காத்திருப்பது போலக் காத்திருக்க வேண்டும். கொக்கு தனது குறிதவறாது இரையைக் கொத்துவது போல, அரசன் தனது செயலைத் தவறாது ஆற்றல் வேண்டும்.

## 5.2 இடன்அறிதல்

வலிமை உடையவன் தக்ககாலத்தை அறிந்து செயற்படுவதோடு கூட, வெல்லுதற்கேற்ற நிலத்தினையும் அறிந்து செயல்படுதல் வேண்டும்.

**5.2.1 தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்**
**இடம் கண்ட பின்அல் லது. (491)**

முற்றுகை செய்வதற்கு ஏற்ற இடத்தைக் கண்ட பின்னரே எச்செயலையும் தொடங்குதல் வேண்டும். அஃதன்றிப் பகைவர்களை இகழவும் கூடாது.

தன்மதிப்பீட்டு வினா
9. 'எள்ளற்க' யாரை?

**5.2.2 முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்துஆம்**
**ஆக்கம் பலவும் தரும். (492)**

மாறுபாடு பொருந்திய வலிமை உடையவர்களுக்கும் அவர்கள் பயின்ற நிலத்தில் உள்ள அரண் உள்ள இடத்தில் போராடுவதால் கிடைக்கும் வெற்றியானது மேலும் பலவகைப் பயன்களும் கிடைக்கும்.

தன்மதிப்பீட்டு வினா
10. எண்ணியர் எதனை இழப்பர்? ஏன்?

**5.2.3 ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து**
**போற்றார்கள் போற்றிச் செயின். (493)**

பகைவர்களோடு போரிடுவதற்குத் தக்க இடம் அறிந்து போரிட்டால்,. வலியில்லாதவரும், வலியுடையவராக வெற்றி கொள்வர்.

**5.2.4 எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து**
**துன்னியார் துன்னிச் செயின். (494)**

தாம் செய் வினை(போர்)க்கு ஏற்ற இடத்தினை அறிந்து செல்லும் அரசன், அரணைப் பொருந்தி நின்று அதனைச் செய்வாராயின், அவரை வெல்லக்கருதிய பகைவரது எண்ணம் அழிந்துபோகும்.

**5.2.5 நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (495)**

ஆழமுடைய நீரில் முதலை வெல்லும்! ஆனால், அந்நீரை நீங்கினால், அம்முதலையை வெற்றி கொள்வது எளிதாகும். ஆகவே, அரசன் தனக்கு உரிய இடத்தினின்று வெற்றி கொள்ளுதல் இயன்றதாகும்.

**5.2.6 கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல் ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து. (496)**

கடலில் செல்லும் பெரிய நாவாய் நிலத்தில் ஓடாது. நிலத்தில் ஓடும் தேர் கடலில் ஓடாது. அதுபோல, அரசனும் தனக்குரிய இடத்தினைத் தேர்ந்தெடுத்து செயல்படவேண்டும்.

**5.2.7 அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின். (497)**

செய்ய வேண்டிய செயல்களைச் சரியான இடத்தோடு பொருந்திச் செய்யும் வினையாளர்களுக்கு (அரசன்) அஞ்சாமையே சரியான துணையாகும்.

**5.2.8 சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும். (498)**

சிறய படை உடையவனுக்கும் சரியான இடத்தில் பொருந்திச் செயற்பட்டால். அஞ்சாமையே அவனுக்குச் சரியான துணையாகும்.

**5.2.9 சிறைநலனும் சீரும் இலர் எனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது. (499)**

அரணும், படையும் இல்லாதவர் எனினும், பகைவர் வாழ்கின்ற இடத்திற்குச் சென்று அவரைத் தாக்குதல் அரிதாகும்.

**5.2.10 கால்ஆழ் களரில் நரிஅடும் கண்அஞ்சா
வேலான் முகத்த களிறு. (500)**

வேலேந்திய வீரர்களைக் கோத்த களிறை, சேற்றுநிலத்து அழுந்திய காலத்து, நரியும் கொல்லும். அதாவது, அரசன் தக்க இடத்தில் இல்லாதிருப்பானானால், அவனை எளியோரும் வென்றுவிடுவர்.

## 5.3 கட்டுரை வினா-விடை அமைப்புகள்

### திருவள்ளுவரின் கல்விக் கோட்பாடு :

திருவள்ளுவரின் கல்விக் கோட்பாடு பற்றிய செய்திகளை அறிவோம். கல்வி பற்றிய செய்திகளைக் கல்வி, கல்லாமை என இரு

தன்மதிப்பீட்டு வினா
11. முதலை எங்கு வெல்லும்?

தன்மதிப்பீட்டு வினா
12. உறுபடையான் ஊக்கம் ஏன் அழியும்?

தன்மதிப்பீட்டு வினா
13. களிறை நரி எப்போது வெல்லும்?

அதிகாரங்களில், நேர்முகமாகவும் எதிர்மறையாகவும் திருவள்ளுவர் உரைக்கின்றார்.

திருக்குறள் பொருட்பாலில் அரசியல் என்ற பிரிவில் இவ்விரு அதிகாரங்களும் அமைகின்றன. திருவள்ளுவரின் நோக்கம் அரசனுக்கு வேண்டிய மாட்சியானது, கல்வியின் வழியில் பெறப்படும் என்பதாகும். ஆனால், இன்றும் கூட வள்ளுவர் உரைக்கும் கல்வி பற்றிய கருத்துக்கள் அனைவருக்கும் பொருந்துவதாக அமைகின்றன என்பது எண்ணத் தகுந்ததாகும்.

**கல்வியும், கற்றவரும் :**

ஒருவர் கற்கத் தகுந்தவற்றைக் குற்றமறக் கற்க வேண்டும். அவ்வாறு கற்ற பிறகு, கற்ற கல்விக்குத் தக்கவாறு நெறியில் நிற்றல் வேண்டும்.

கல்வி என்பது எழுத்துக்களோடு எண்களையும் சேர்ந்து கற்பதாகும். இவ்விரண்டும் வாழ்கின்ற உயிர்க்குக் கண் போன்றதாகும். கல்வி கற்றவர்களே கண் உடையவர்கள் ஏனையவர்கள் கண்பெற்றிருந்தாலும், அவற்றைக் கண் எனக் கொள்ள முடியாது. அவை புண்களே ஆகும்.

கல்விகற்ற புலவர்களோடு கூடிப்பழகி, இவரைப் பிரிவது வருத்தம் தருவது, என எண்ணுமாறு கருதுதல் வேண்டும். அவ்வாறு கல்விகற்றவரே உண்மையான கல்வி அறிவு உடையவர்கள் ஆவர்.

எவ்வாறாயினும் கல்வியைத் தாழ்ந்து கற்றல் வேண்டும்.செல்வர்கள் முன் வறியவர்கள் தாழ்ந்து நிற்பதுபோலப் பணிந்தாவது கல்வியைக் கற்றல் வேண்டும். கல்லாதவர் இழிந்தவர் ஆவர்.

மணற்கேணியில் தோண்டும் அளவிற்கு நீர் ஊறுவது போல, மக்களுக்கு அறிவானது கற்ற அளவில் பெருகும். கல்விகற்றவனுக்கு எந்த ஊரும், நாடும் சொந்தமானதாகும். ஆகவே, ஒருவன் சாகும்வரையில் கல்லாமல் இருப்பது தவறானது ஆகும்.

கல்வியானது ஒருபிறவியில் முடியாது. அது எழுபிறப்பிலும் தொடருவது ஆகும். ஒருவனுக்கு ஏழுபிறப்பிலும் உதவும் தன்மை உடையது ஆகும். தாம் இன்புறுவதற்குக் காரணமான கல்வியால் உலகமும் இன்புறும் தன்மை கண்டு கற்றறிந்தவர் மேலும் மேலும் கல்வியை விரும்புவர்.

ஒருவருக்கு அழியாததாக அமைவது கல்வியே ஆகும். ஏனையவை எல்லாம் அழியக்கூடிய செல்வமாகும்.

இவ்வாறு கல்வியின் சிறப்பினை எடுத்து உரைக்கும் வள்ளுவர், கல்லாமையின் தீமையையும் எடுத்துக் காட்டுகிறார்.

**கல்லாமை :**

வட்டாடும் கோட்டினை இழைக்காமல் காய்களை உருட்டுவது போன்றது, நூல் பயிற்சி இல்லாமல் கற்றவரிடம் பேசுவது ஆகும். கற்றவர் அவையில் கல்லாதவன் பேச முற்படுவது முலையில்லாதவள் பெண் தன்மையை விரும்புதல் போன்றதாகும்.

கல்வி இல்லாதவன் அறிவுடையனாக இருந்தாலும் சான்றோர் அவர்களை அறிவுடையவர்களாகக் கருதமாட்டார்கள். ஏனெனில், கல்லாதவர் தன்னைத் தானே மதித்துக் கொள்ளும் முறைமை உடையவர்கள். ஆகவே, கற்றார் முன் கூடிப்பேசும் போது அப்பேச்சினால் அவர்தம் கல்லாமை வெளிப்பட்டுவிடும்.

கல்லாதவர் உயிரோடு இருப்பினும் அவர்கள் ஏதும் விளையாத களர் நிலத்திற்கு ஒப்பானவர் ஆவர். நுட்பமான அறிவைத்தரும் கல்வி கல்லாதவனுடைய எழிலானது மண்ணால் புனையப்பட்ட பாவை போன்றதாகும்.

கல்லாதவரிடம் சேர்ந்துள்ள செல்வமானது கற்றறிந்தாரிடம் உள்ள வறுமையை விடத் துன்பம் தருவதாகும். கல்லாதவர் உயர்ந்த குடியில் பிறந்தவராக இருப்பினும், பெருமை அற்றவர் ஆவர். கல்வி கற்றவர் தாழ்ந்த குடியில் பிறந்தவர்களாக இருந்தாலும் பெருமை உடையவர் ஆவர்.

அறிவு விளங்குதற்குக் காரணமான நூல்களைக் கற்றவரோடு கல்லாதவர்கள் இருப்பது மக்களும் விலங்குகளும் போல வேற்றுமை உடையவர்கள் ஆவர்.

இவ்வாறு கல்வியின் சிறப்பும் கல்லாமையின் இழிவும் எடுத்தியம்பப்படுகின்றன.

**'தெரிந்து செயல்வகை' என வள்ளுவர் குறிப்பன யாவை? என்னென்ன கூறுகிறார்?**

அரசன் அறிவு பெறும் முறைமையைக் கல்வி, கேள்வி, கல்லாமையில் உரைக்கும் வள்ளுவர், அவனது அறிவுடைமைச் சிறப்பை அறிவுடைமை அதிகாரத்தில் எடுத்து உரைக்கிறார். அவன் செய்ய வேண்டிய – செய்கின்ற செயல்களை அவற்றின் தன்மை அறிந்து செய்தல் வேண்டும் என்பதனை அவ்வதிகாரத்துள் எடுத்த உரைக்கின்றார்.

ஒரு செயலை செய்யும்முன்பு அதனால் ஏற்படும் அழிவையும், அழிந்தபின் ஆவதையும், பின்பு உண்டாகும் ஊதியத்தையும் ஆராய்ந்து செய்ய வேண்டும்.

ஆராய்ந்து சேர்ந்த இனத்துடன் நன்றாகத் தேர்ந்து, தாமும் எண்ணிப் பார்த்துச் செய்கின்றவர்களுக்கு அரிய பொருள் ஒன்றும் இல்லை.

பின்னால் ஏற்படும் விளைவையும் ஊதியத்தையும் எண்ணி கையில் உள்ள முதலை இழந்துவிடக் காரணமான செயலை அறிவுடையர்கள் மேற்கொள்ள மாட்டார்கள்.

இழிவு தருகின்ற குற்றத்திற்கு அஞ்சுகின்றவர்கள், இன்ன ஊதியம் பயக்கும் என்னும் தெளிவு இல்லாத செயலைத் தொடங்கமாட்டார்.

செயல்களின் வகைகளை எல்லாம் எண்ணாமல் செய்யத் தொடங்குதல், பகைவரை வளரும் பாத்தியில் நிலைபெறச் செய்திடும் ஒரு வழியாகும்.

ஒருவன் செய்யத்தகாத செய்லகளைச் செய்வதனால் கெடுவான், செய்யத்தக்க செயல்களைச் செய்யாமல் விடுவதனாலும் கெடுவான்.

செய்யத் தகுந்த செயலையும் வழிகளையும் எண்ணிய பிறகே துணிந்து தொடங்க வேண்டும். துணிந்தபிறகு எண்ணிப் பார்ப்பது தவறாகும்.

தக்கவழியில் செய்யப்படாத முயற்சி பலர் துணையாக நின்று காத்தபோதிலும் குறையாகிவிடும்.

அவரவருடைய இயல்புகளை அறிந்து அவரவர்க்குப் பொருந்துமாறு செய்யாவிட்டால், நன்மை செய்வதிலும் தவறு உண்டாகம்.

தம் நிலைமையோடு பொருந்தாதவற்றை உலகம் ஏற்றுக் கொள்ளாது. ஆகையால், உலகம் இகழ்ந்து தள்ளாத செயல்களை ஆராய்ந்து செய்ய வேண்டும்.

## தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

1. 5.1.2
2. 5.1.3
3. 5.1.5
4. 5.1.7
5. 5.1.9
6. 5.1.10
7. 5.2.1
8. 5.2.4
9. 5.2.5
10. 5.2.8
11. 5.2.10

## வினாக்கள்

1. காலமறிதலின் இன்றியமையாமையைக் குறள்வழி விளக்குக.
2. காலம் கருதின் கைகூடுவது எது?
3. காலம் கருதுபவர் நோக்கவேண்டுவது எது?
4. 'பொருதகர்' புலப்படுத்துவது எதனை?
5. தலையாலே யாரைத் தாங்குதல் வேண்டும்?
6. செய்தற்கு அரிய செயல் எது?
7. 'இடம் அறிதல்' – விளக்குக.
8. அரண் சேர்ப்பது எது?
9. முதலை வழி குறள் எதனை புலப்படுத்துகிறது?
10. கடல் ஓடும் நாவாய் ஓடாது எங்கே? எவ்வாறு?
11. சிறுபடையால் வெல்லுதல் இயலுமா? எவ்வாறு?
12. நரி எவ்வாறு வெற்றி பெறும்?
13. திருக்குறள் காட்டும் கல்வியின் சிறப்பினை விவரி.
14. இறையாகிய அரசன் எவ்வாறு செயல்பட வேண்டும்?
15. 'குற்றங்கடிதல்' உரைக்கும் பகுதிகளைக் குறிப்பிடுக.
16. அரசன் எதனை அறிந்து செயல்பட வேண்டும்?
17. விலங்குகளின் செயல்களாக வள்ளுவர் குறிப்பிடுவன யாவை?
18. பெரியாரை ஏன் துணைக் கொள்ளுதல் வேண்டும்?

# அலகு 6 : நாலடியார் - செல்வம் நிலையாமை

## அறிமுகம்

குறளுக்கு அடுத்ததாகப் போற்றப்படும் நலடியார் இந்தப்பாடத்தில் அறிமுகப்படுத்தப்படுகிறது.

நாலடியார் நூல் பற்றியும், சமண சமயத்தின் வழி நிலையாமை வலியுறுத்துவது நோக்கப்படுகிறது.

## நோக்கம் :

1. தமிழில் குறளுக்கு அடுத்தபடியாகப் போற்றப்படும் நாலடியார் பற்றித் தெரிந்து கொள்ளுதல்.
2. செல்வம் நிலையாமை என்ற தலைப்பில் அமைந்த நாலடியார் செய்யுள் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுதல்.

## பாட அமைப்பு :

6.0 நாலடியார் அறிமுகம்

6.1 செல்வம் நிலையாமை

6.2 தன்னறி வினா–விடைக்குறிப்புகள்

6.3 வினாக்கள்

## 6.0 நாலடியார் அறிமுகம்

### 6.0.0 ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி
### நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி

என்பது தமிழ் வழக்கு. ஆலம் குச்சியும் வேலங்குச்சியும் பல்லுக்கு உறுதிதரும் என்பது தமிழரின் பழக்கம் சார்ந்த நம்பிக்கையாகும். அதுபோல வாழ்க்கைக்கு உறுதி தரும் கருத்துக்களை நாலடியாரும் திருக்குறளும் தருவன என்பது ஆன்றோர் வாக்கு.

6.0.1 நாடியார் சமணமுனிவர்களால் எழுதப் பட்டது என்று ஒரு செவிவழிக்கதை நிலவுகிறது.

பஞ்சம் காரணமாக வடநாட்டில் இருந்து வந்த சமணமுனிவர்கள் பாண்டிநாட்டில் தஞ்சம் அடைந்தனர். பாண்டியன் ஆதரவில் பசித்துன்பம் நீங்கியவர்கள், பஞ்சம் தீர்ந்த காலத்தில், தம்நாடு திரும்ப எண்ணம் கொண்டனர். சமண முனிவர்களைப் பிரிய மனமில்லாத பாண்டியன், அவர்களைத் தன்னுடனேயே தங்கச் சொல்கிறான். வெளியேற எண்ணிய சமண முனிவர்கள், ஒவ்வொருவரும் ஒரு பாடலை எழுதி வைத்து விட்டுப் பாண்டிய நாட்டிலிருந்து சென்றுவிட்டனர். மனம் வெறுப்புற்ற மன்னன், பாடல்கள் எழுதிய ஏடுகளை வைகை ஆற்றில் எறிந்தான். ஆற்றின் நீரோட்டத்தை எதிர்த்த ஏடுகளைத் தொகுத்தான் பாண்டிய மன்னன்! அப்படித் தொகுத்த பாடல்கள் நானூறும் நாலடி நானூறு / நாலடியார் எனப்படுகின்றன.

தன்மதிப்பீட்டு வினா
1. நாலடியார் ஆசிரியர் யார்? - ஆய்க.

**6.0.2** அவ்வாறு சமணமுனிவர் பாடல்களைத் தொகுத்தவர் பதுமனார்.

**'எண்பெருங் குன்றத்து எணாஅயிரம் இருடி**
**பண்பொருந்தப் பாடியபா நானூறும்'**

என்ற தனிப்பாடல் நாலடியாரின் பெருமையைச் சுட்டுகிறது.

**6.0.3** திருக்குறள் போன்றே நாலடியாரும் அறம், பொருள், இன்பம் என்ற முப்பரிவுகளை உடையது. 40 அதிகாரங்களுக்குப் பத்துப்பத்துப் பாடல்களாக நானூறு பாடல்கள் உள்ளன. இந்நூலில் ஆண்களை விளித்துப் பேசும் விதமாகவும், பெண்களை விளித்துப் பேசும் விதமாகவும் பாடல்கள் உள்ளன. இதனை முறையே ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலை என்பது தமிழ் இலக்கிய மரபு!

**6.0.4** வான்தோய் மலைநாட (10) கானக நாட (76) ஈர்ங்குன்ற நாட (113) என்பவனவற்றை ஆடூஉ முன்னிலைக்குச் சான்றாக்கலாம். தடங்கண்ணாய் (114) வேல்நெடுங்கண்ணாய் (265) என்பனவற்றை மகடூஉ முன்னிலைக்குச் சான்றாக்கலாம்.

தன்மதிப்பீட்டு வினா
2. நாலடியாரில் எத்தனை பாடல்கள் உள்ளன?

**6.0.5** நாலடியாரின் முதல்பிரிவு அறத்துப்பால், அப்பகுதியில் முதலாவதாக அமைவது துறவறஇயல்! சமணம் துறவறத்திற்கு முன்னுரிமை அளிப்பதற்கு இந்த அதிகார வைப்புமுறையே அடிப்படை என்பர் திறனாய்வாளர்.

தன்மதிப்பீட்டு வினா
3. ஆடூஉ முன்னிலை என்றால் என்ன?

**6.0.6** துறவற இயலில் முதற்பகுதியாக அமைவன செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்பனவாகும்.

தன்மதிப்பீட்டு வினா
4. மகடூஉ முன்னிலை என்றால் என்ன?

**அறத்துப்பால்**

## 6.1 செல்வம் / நிலையாமை

தன்மதிப்பீட்டு வினா
5. கூழை ஏன் இரந்து பெறுகின்றனர்?

**6.1.1 அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட**
**மறுசிகை நீக்கியுண் டாரும் - வறிஞராய்ச்**
**சென்றிரப்பர் ஓரிடத்துக் கூழ்எனின், செல்வம்ஒன்**
**றுண்டாக வைக்கப்பாற் றன்று. (1)**

அறுசுவை உணவை மனைவி அருகே அமர்ந்து ஊட்ட, அதனை நீக்கி உண்ணும் செல்வரும் ஒரு காலத்தில் வறுமையுற்று ஒருபிடி உணவிற்காக எங்காவது சென்று கூழினைஇரந்து உண்ணும் நிலை வரும். ஆகவே செல்வம் நிலையுடையது என்னும் எண்ணத்தை விடுத்து, அதனைத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ளல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
6. சகடக்கால் போல வருவது எது?

**6.1.2 துகள்தீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டும்**
**பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க;**
**அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்**
**சகடக்கால் போல வரும்.**

குற்றமற்ற சிறந்த செல்வம் ஒருவருக்கு உண்டாகுமானால், ஏர் உழுது விளைத்த உணவினை விருந்தினர் பலரோடு சேர்ந்து உண்ண வேண்டும். ஏனெனில் செல்வம் உறுதியாக யாரிடத்திலும் நிலைத்து நில்லாது வண்டியின் சக்கரம்போல உருண்டு ஓடக் கூடியது ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
7. மனையாளை மாற்றார் கொலும் நிலை என்?

**6.1.3 யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்**
**சேனைத் தலைவராய்ச் சென்றோரும் - ஏனை**
**வினை உலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட**
**மனையாளை மாற்றர் கொள.**

யானையின் கழுத்தில் வெண்கொற்றக் குடை நிழலில் பல்வேறு சேனைகளுக்கும் தலைவராக ஆரவாரமாக உலாச் சென்ற அரசர்களும், தீவினை கெடுக்க தமது மனைவியையும் பிறர் கவர்ந்து கொள்ளுமாறு முன்னர் உள்ள செல்வநிலை மாறுபடுமாறு வறுமையை அடைந்து துன்புறுவர்.

யானையின் மீது செல்லும் செல்வரும் துன்பமுறும் வறுமையை எய்துவர் எனில், ஏனையவர்கள் பெறும் வறுமை கொடுமையானது ஆகும். ஏழ்மை, எல்லா நல்லனவற்றையும் அழிக்கும் இயல்பு உடையது. மனையாளையும் இழக்கும் அளவிற்கு இழிவு உடையது என்பது கருத்தாகும்.

**6.1.4 நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்து**
**ஒன்றின ஒன்றின வல்லே செயின்செய்க**
**சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்**
**வந்தது வந்தது கூற்று.**

தன்மதிப்பீட்டு வினா
8. நில்லாது செல்வது எது?

உடம்போடு கூடிவாழுமாறு ஏற்பட்ட நாட்கள் செல்லுகின்றன. உயிரைக் கவரும் எமன் விரைந்து வருகின்றான். நிலையானவை எனக் கருதப்பட்ட செல்வங்களோ நிலைபெறாமல் செல்லக்கூடியவை. ஆகவே, செல்வத்தைச் சிறந்த அறவழியில் செலவழித்தல் விரைந்து செய்யக்கூடிய செயலாகும்.

**6.1.5 என்னானும் ஒன்றுதம் கையுறப் பெற்றக்கால்**
**பின்னாவ தென்று பிடித்திரார் - முன்னே**
**கொடுத்தார் உயப்போவர் கோடில்தீக் கூற்றம்**
**தொடுத்தாறு செல்லும் சுரம்.**

தன்மதிப்பீட்டு வினா
9. இளம் பருவத்தில் ஏன் அறம் செய்ய வேண்டும்?

யாதானும் ஒரு பொருளைத் தமது கையில் கிடைக்கும்படி பெற்றவர்கள், தமது மூப்புக் காலத்திற்கு உரியது என்று அப்பொருளை இறுகப் பிடித்துக்கொண்டு சும்மா இல்லாமல் தமது இளம்பருவத்தில் இருந்தே அறம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்வதால் அருளில்லாத கூற்றுவன் பாசக்கயிற்றால் உயிர்களைப் பிணித்துச் செல்லும் காட்டு வழியில் தப்பிப் புண்ணிய உலகம் புகுவார்.

அதாவது இளம்பருவத்தில் அறம் செய்பவர்கள், உயிர்பிரியும் தருணத்தில், புண்ணிய உலகில் நுழைவார்கள்.

**6.1.6 இழைத்தநாள் எல்லை இகவா; பிழைத்தொரீஇக்**
**கூற்றம் குதித்துய்ந்தார் ஈங்கில்லை - ஆற்றப்**
**பெரும்பொருள் வைத்தீர் வழங்குமின், நாளைத்**
**தழீஇம் தழீஇம் தண்ணம்படும்.**

தன்மதிப்பீட்டு வினா
10. நாளைத் தள்ளிப்போடாமல் எதனைச் செய்ய வேண்டும்?

உடலோடு கூடிவாழ அளவு செய்துள்ள நாள்கள் - வாழ்நாள் பெருகாது. கூற்றுவன் கவர்ந்து செல்லுதலிலிருந்து உயிர் பிழைப்பவர் யாரும் இல்லை. ஒருவேளை நாளைக்கே சாவுப்பறை ஒலிக்கும் சாநாள் வரலாம். ஆதலால், பொருள் மிகுதியாகக் கொண்டுள்ள செல்வர்கள் உடனடியாக இப்பொருளை (அறம் செய்தல்) பிறர்க்கு அளித்து உதவ வேண்டும்.

குறித்த ஆயுட்காலத்துக்கு மேல் யாரும் உயிர்வாழுதல் இயலாது. ஆகவே, உடனே அறம்செய்து நலம்பெறுதல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
11. கூற்றம் அளந்து நாளுண்ணுதலால் நாம் செய்ய வேண்டுவது எது?

**6.1.7 தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்**
**கூற்றம் அளந்து நும்நாளுண்ணும்; ஆற்ற**
**அறம்செய்து அருளுடையீர் ஆகுமின்; யாரும்**
**பிறந்தும் பிறவாதா ரில்.**

நாள்தோறும் தோன்றிமறையும் சூரியன், நமது வாழ்நாளைத் தானியம் போல் அளக்கின்ற கருவியாவான். அதாவது ஒவ்வொரு நாளும் நம்து வாழ்நாள் கழிகிறது. ஆகவே, பிறருக்கு உதவிசெய்து உயிர்களிடத்தில் அருளுடையவராக இருத்தல் வேண்டும்.

அதாவது அருளுடையராதலே பிறவியின் பயனாதலால் அறம்செய்து அருளுடையராதல் வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
12. செல்வம் எவ்வாறு தோன்றி மறையும்?

**6.1.8 செல்வர் யாம்! என்றுதாம் செல்வுழி எண்ணாத**
**புல்லறிவாளர் பெருஞ்செல்வம், எல்லில்**
**கருங் கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல் தோன்றி**
**மருங்கு அறக் கொட்டிவிடும்.**

தான் மிகப் பெரிய பணக்காரர் என எண்ணிச் செருக்குடன் இருப்பவர்கள் தாம் ஒருநாள் மரணம் அடைவோம் என்பதனை எண்ணமாட்டார்கள். அவர்கள் பெற்ற செல்வம் இரவில் கருமேகக் கூட்டத்தின் இடையில் திடும் என்று தோன்றிச் சிறிது நேரத்தில் மறைந்துவிடும் மின்னலைப்போல இருந்த இடம் தெரியாமல் எல்லாம் அழிந்துபோகும்.

தன்மதிப்பீட்டு வினா
13. துன்னரும் கேளிர் துயர் களைவான் யார்? ஏன்?

**6.1.9 உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்**
**துன்னருங் கேளிர் துயர்களையான் - கொன்னே**
**வழங்கான் பொருள்காத் திருப்பானேல், அஆ**
**இழந்தான் என்றுஎண்ணப் படும்.**

செல்வம் உடைய ஒருவன் அப்பொருளைக் கொண்டு அடைவதற்கு உரிய இன்பங்களைத் தானும் நுகராமல் நிலையான மதிப்பைத் தேடிக்கொள்ளாமல், உயர்ந்த புகழையும் அடையாமல், நெருக்கமான சிறந்த உறவினர்களுடைய துன்பம் நீக்காமல், ஏழை எளியவர்க்கு எதுவும் தராமல், அச்செல்வத்தைப் பயனின்றிப் பாதுகாத்து வருபவன், தன் பொருள் அனைத்தையும் இழந்தவனாகவே கருதப்படுவான்.

தன்மதிப்பீட்டு வினா
14. 'தேனீக்கரி' போன்றது எது?

**6.1.10 உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்**
**கெடாஅத நல்லறம் செய்பார் - கொடாஅது**
**வைத்தீட்டி னார்இழப்பர், வான்தோய் மலைநாட!**
**உய்த்தீட்டும் தேனீக் கரி.**

விண்ணைத் தொடும் உயர்ந்த மலைக்கு உரிய நாடனே! யாருக்கும் எதனையும் கொடுக்காமலும், நல்ல உடை உடுக்காமலும் தம் உடம்பை மிக வருத்தியும் அறியாத நல்ல அறங்களைச் செய்யாமலும் பொருளை ஈட்டிக் காத்து வருபவர் தம் செல்வத்தை ஒருநாள் இழந்து விடுவர். அரும்பாடுபட்டு நாள்தோறும் சேர்க்கும் தேனை ஒருநாள் முற்றுமாக இழந்துவிடும் தேனீயைப் போல பிறருக்கு எதனையும் நல்காதவரும் அழிவர்.

'மலைநாட' என்று ஆணை அழைத்தற்கு ஏற்ப, இச்செய்யுளில் மலைத்தேன் குறிப்பிடப்பட்டுள்ளமை சிறப்பானது ஆகும்.

## 6.2 தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | 6.0.1 | 8. | 6.1.4 |
| 2. | 6.0.3 | 9. | 6.1.5 |
| 3. | 6.0.4 | 10. | 6.1.6 |
| 4. | 6.0.5 | 11. | 6.1.7 |
| 5. | 6.1.1 | 12. | 6.1.8 |
| 6. | 6.1.2 | 13. | 6.1.9 |
| 7. | 6.1.3 | 14. | 6.1.10 |

## 6.3 வினாக்கள்

1. நாலடியார் – குறிப்பு வரைக.
2. செல்வம் நிலையாமை குறித்து நாலடியார் கூறுவன யாவை?
3. 'நின்றன நின்றன...' என நாலடியார் உணர்த்துவது எது?

# அலகு 7 நலடியார் - இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை

**அறிமுகம் :**

நாடியார் துறவறவியலில் உரைக்கும் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை பற்றியதாக இப்பாடம் அமைகிறது.

**நோக்கம் :**

1. இளமை நிலையாமை பற்றிய செய்திகளை அறிதல்.
2. யாக்கை நிலையாமை பற்றிய செய்திகளை அறிதல்.
3. இவ்வதிகாரங்களின் வழி சமணம் வலியுறுத்தும் துறவினையும், அறத்தின் இன்றியமையாமையையும் அறிந்து கொள்ளுதல்.

## பாடப்பகுப்பு

7.1 இளமை நிலையாமை

7.2 யாக்கை நிலையாமை

7.3 கட்டுரை வினாக்கள்

7.4 தன்னறி வினா-விடைக் குறிப்புகள்

7.5 வினாக்கள்

### 7.1 இளமை நிலையாமை

**(இளமை நிலையில்லாதது என்பதனைச் சுட்டும் இயல் இது)**

**7.1.1 நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்; புரைதீரா
மன்னா இளமை மகிழ்ந்தாரே கோல்ஊன்றி
இன்னாங் கெழுந்திருப் பார்.**

தன்மதிப்பீட்டு வினா
1. குழவியிடத்தே துறப்பவர் யார்? ஏன்

நல்ல அறிவைப் பெற்றவர்கள் முதுமையில் நரையும் மூப்பும் வந்துசேரும் என்பதனை முன்னரே உண[illegible]ந்து இளம் பருவத்திலே துறவியாகி விடுவார்கள். குற்றங்களை விலக்காத நிலைக்காத இளமையை நம்பித் துறவு அடையாமல் காம வெகுளி மயக்கங்களில்

மூழ்கிக் கிடந்தவர்கள் முதுமையுற்றுக் கம்பு ஊன்றித் துன்பத்தில் ஆழ்ந்திருப்பார்கள்.

**7.1.2 நட்புநார் அற்றன நல்லாரும் அஃகினார்**
**அறுபுத் தளையும் அவிழ்ந்தன; - உட்காணாய்**
**வாழ்தலின் ஊதியம் என்னுண்டாம்? வந்ததே**
**ஆழ்கலத் தன்ன கலி.**

நண்பர்கள் கொண்டிருந்த அன்பு நீங்கியது. இளமையில் அன்பு கொண்டிருந்த மகளிரும் இளமை நீங்கும் பொழுது அன்பு குறைவர். சுற்றத்தார்களும் உன்மீது கொண்டிருந்த அன்பில் நீங்குவர். இவற்றின் மேலும் கடலில் மூழ்குபவர்க்கு வருகின்றது போன்ற முதுமைப் பருவமாகிய துன்பம் வந்துவிட்டது. இதற்கப் பின்னரும் இளமையை விரும்புவதால் என்ன பயன் உண்டாகும்? என்பதனை எண்ணிப் பார்ப்பாயாக!

தன்மதிப்பீட்டு வினா
2. ஊதியம் என்னுண்டாம் - விளக்குக.

**7.1.3 சொல்தளர்ந்து கோல் ஊன்றிச் சோர்ந்து நடையினராய்ப்**
**பல்கழன்று பண்டம் பழிகாறும் - இல்செறிந்து**
**காமநெறி படரும் கண்ணினார்க்கு இல்லையே**
**ஏம நெறி படருமாறு.**

கிழப்பருவம் எய்திப் பேச்சுத் தடுமாறிக் கொம்பு ஊன்றித் தளர்ந்த நடை நடந்து பற்கள் விழ, பொக்கை வாய் ஆகி உடல் பழி சுமக்கும் அளவு இல்லறத்தில் ஈடுபட்டுக் காம வழிகளில் செல்லும் கருத்துடையவர்க்குத் துறவற வழியில் செல்லும் ஏமநெறி இல்லை.

தன்மதிப்பீட்டு வினா
3. யாருக்கு ஏமநெறி இல்லை? ஏன்?

**7.1.4 தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டுன்றி**
**வீழா இறக்கும் இவள்மாட்டும் - காழ்இலா**
**மம்மர்கொள் மாந்தர்க் கணங்காகும் தன்கைக்கோல்**
**அம்மனைக்கோல் ஆகிய ஞான்று.**

உடம்பு கூனி வளைந்தும் தளர்ந்தும் தலைநடுங்கியும் தடியினை ஊன்றியும் கீழே வீழ்ந்தும் இறக்கும் நிலையிலுள்ள இவரிடத்தும் மன உறுதியில்லாமல் காம மயக்கங்கொண்ட மக்களுக்கு, இவள் இப்பொழுது தன்கையில் பிடித்துக் கொண்டிருக்கும் ஊன்றுகோல், தன் தாய் ஊன்றுதற்குரிய கோலாயிருந்த காலத்தில், தீண்டி வருத்தும் தெய்வப் பெண்ணாகவே இருந்திருப்பாள்.

**7.1.5 எனக்குத்தாய் ஆகியாள் என்னைஈங் கிட்டுத்**
**தனக்குத்தாய் நாடியே சென்றாள் - தனக்குத்தாய்**
**ஆகியவளும் அதுவானால் தாய்த்தாய்க் கொண்டு**
**ஏகும் அளித்திவ் வுலகு.**

தன்மதிப்பீட்டு வினா
4. 'தாய்செல்லல்' எதனைக் குறிப்பிடுகிறது?

எனக்குத் தாயாக இருந்தவள் என்னை இங்குப் பெற்று விட்டுவிட்டுத் தனக்கு ஒரு தாயைத் தேடிக் கொண்டு போய்விட்டாள். அதாவது இறந்துபோய் விட்டாள். அவளுக்குத் தாயாக இருந்தவளும் அவ்வாறே இறந்து போய்விட்டாள். இவ்வாறு தாயர் ஒருவரையொருவர் தேடிச் செல்லும் இயல்பினை உடைய இவ்வுலகம் இரங்கத்தக்கதாகும்.

**7.1.6 வெறியயர் வெங்களத்து வேல்மகன் பாணி**
**முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க**
**மறிகுள குண்டன்ன மன்னா மகிழ்ச்சி**
**அறிவுடையாளர் கண் இல்.**

தன்மதிப்பீட்டு வினா
5. அறிவுடையார் கண் இல்லாதது எது?

வெறியாடல் சடங்கினைச் செய்கின்ற கொடிய பலிக்களத்தில் வேலையுடைய பூசாரியின் கையில் விளங்கும்தளிர்களை இடையிட்டு நறுமண மலர்களை இணைத்துக் கட்டிய மாலையில் பொருந்திய தழை உணவினைப் பலி இடுவதற்கு நிறுத்தப்பட்ட ஆடானது உண்டு மகிழ்ச்சி அடைவது போல இளமையை எண்ணி மகிழும் பான்மை அறிவுடையர்களிடத்தில் இல்லை.

**7.1.7 பனிபடு சோலைப் பயன்மர மெல்லாம்**
**கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை - நனிபெரிதும்**
**வேல்கண்ணன் என்றிவனை வெஃகன்மின் மற்றிவளும்**
**கோல்கண்ண ளாகும் குனிந்து.**

தன்மதிப்பீட்டு வினா
6. பயன் மரம் கனியுதிர்தல் எதற்கு உவமை?

குளிர்ச்சியான சோலையில் காய்த்திருக்கும் காய்கள் கனிந்தவுடன் உதிர்ந்துவிடும். இளமையும் அதுபோல உதிரும் தன்மையுடையதாகும். வேலைப் போன்ற கூரிய விழிகளை உடையவள் என்று ஒரு பெண்ணை விரும்பிட வேண்டாம். இவளும் கூன்முதுகு உடையவளாகிக் கொம்பு ஊன்றி நடை தடுமாறும் முதுமைப் பருவத்தை வந்து அடைவர்.

**7.1.8 பருவம் எனைத்துள பல்லின்பால் ஏனை**
**இருசிகையும் உண்டீரோ என்று-வரிசையால்**
**உண்ணாட்டம் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோள்**
**எண்ணார் அறிவு டையார்.**

தன்மதிப்பீட்டு வினா
7. இவ்வுடம்மைப் பெரிதாக எண்ணாதவர் யார்? ஏன்?

உங்களுக்கு எத்தனை ஆண்டுகள் ஆயின? பல்லின் தன்மை எப்படியுள்ளது? மென்மையும் வன்மையும் வாய்ந்த இருவகை உணவுகளையும் உண்டீரோ? என்று முறையாகக் கேள்விகள் கேட்டு உடலின் வலிமையையும் இளமையையும் நிலையானவை அல்ல என்று தெளிவுறுத்தலால், அறிவுடையர்கள் இவ்வுடம்பின் தன்மையாகிய இளமையைப் பெரிதாக எண்ணமாட்டார்.

**7.1.9 மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது**
**கைத்துண்டாம் போழ்தே கரவாது அறஞ்செய்ம்மின்**
**முற்றியிருந்த கனியொழியத் தீவளியால்**
**நற்காய் உதிர்தலும் உண்டு.**

தன்மதிப்பீட்டு வினா
7. ஏன் விரைந்து அறம் செய்தல் வேண்டும்?

மரங்களில் கனிந்த பழங்கள் மட்டுமல்ல, தீமை விளைவிக்கும் புயற்காற்றால் நல்ல காய்களும் உதிர்ந்து விடுவதுண்டு. அதுபோல இளையவர்களுக்கும் இறப்பு நேரிடலாம். எனவே, செய்ய வேண்டிய அறச்செயல்களைப் பின்னர்ச் செய்யலாம் என எண்ணல் கூடாது. கையில் செல்வம் உள்ளபோதே அறம் செய்தல் வேண்டும்.

**7.1.10 ஆள்பார்த்து உழலும் அருள்இல் கூற்றுஉண்மையால்**
**தோட்கோப்புக் காலத்தால் கொண்டு உய்ம்மின் மீள் பிதுக்கிப்**
**பிள்ளையைத் தாய் அலறக் கோடலால், மற்றுஅதன்**
**கள்ளம் கடைப்பிடித்தல் நன்று.**

தன்மதிப்பீட்டு வினா
8. இயமன் செயல் வழி நாலடியார் நமக்கு எதனை உணர்த்துகிறது?

வாழ்நாள் முடிவுற்ற ஆட்களைத் தேடிப்பிடித்து உயிரைவாங்கும் அருளில்லாத இயமன் ஒருவன் இருக்கின்ற காரணத்தால் மறுமையுலகிற்குச் செல்லும் வழிக்கு உதவுவதாகிய அறத்தினை இளமையிலேயே தேடிக் கைக்கொண்டு பிழையுங்கள்! இயமனானவன், கருப்பையில் உள்ள பிள்ளையையும், பிறந்த பிஞ்சுக் குழந்தைகளையும் கூடக் கொல்ல முற்படுவான். அதாவது, இளமையிலேயே அறம் செய்தல் வேண்டும்.

### 7.2.0 - யாக்கை நிலையாமை
**(உடல் நிலையற்றது)**

**7.2.1 மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்**
**தலைமிசை கொண்ட குடையர் - நிலமிசைத்**
**துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லால்**
**எஞ்சினார் இவ்வுலகத் தில்.**

தன்மதிப்பீட்டு வினா
9. எஞ்சினார் இவ்வுலகில் உண்டா?

மலையின்மீது தோன்றுகின்ற நிலவைப் போல யானையின் மீது வெண்கொற்றக் குடையின்கீழ் வீற்றிருக்கின்ற பெருநில மன்னரும் இந்தஉலகில் இறப்பிலிருந்து தப்ப முடியாது. இவ்வுலகில் இறப்பிலிருந்து தப்பியவர் எவரும் இல்லை.

**7.2.2 வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்**
**வீழ்நாள் படாஅ தெழுதலால் - வாழ்நாள்**
**உலவாமுன் ஒப்புர வாற்றுமின் யாரும்**
**நிலவார் நிலமிசை மேல்.**

தன்மதிப்பீட்டு வினா
10. ஒப்புரவாற்றுமின் உடனே ஏன்?

வாழ்நாளை அளக்கும் அளவுகோலாகச் சூரியன் நாள்தோறும் விடாமல் உதயமாகின்றான். உலகில் பிறந்த யாரும் சாவுக்குத் தப்பி நிலைத்து நிற்பது இல்லை. ஆகவே, ஒருவர் மரணம் வரும்முன் அறங்களைச் செய்தல் வேண்டும்.

**7.2.3 மன்றம் கறங்க மணப்பறை யாயின**
**அன்றவர்க்கு ஆங்கே பிணப்பறையாய்ப் - பின்றை**
**ஒலித்தலும் உண்டாமென்று உய்த்துபோம் ஆறே**
**வலிக்குமாம் மாண்டார் மனம்.**

தன்மதிப்பீட்டு வினா
11. பிணப்பறைவழி நாலடியார் உணர்த்துவது யாது?

மன்றம் முழுவதும் ஓசை உண்டாகும்படி மணவோசைக்கு உரிய பறைகள் முழங்கும். அக்கணமே அவ்வொலி பிணமுழக்கமாக முழங்குவதற்கும் வாய்ப்பு உண்டு. ஆகவே உடலின் நிலையாமையை உணர்ந்து இல்லறத்திற்குச் செல்லாமல், துறவறத்திற்குச் செல்வர்.

**7.2.4 சென்றே எறிப ஒருகால் சிறுவரை**
**நின்றே எறிப பறையினை - நன்றேகாண்**
**முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டெழுவர்**
**செத்தாரைச் சாவார் சுமந்து.**

யாராவது ஒருவர் இறந்தால் சாவுப் பறையைக் கொட்டுவர். இடைவெளிவிட்டு மறுபடியும் கொட்டுவர். மீண்டும் இடைவெளிவிட்டு மூன்றாம் முறை கொட்டுவர். அது சாவு வீடாகும். அவ்வீட்டில் செத்தவரைத் துணியால் மூடி கொள்ளித்தீயைச் சுமந்துவரப் பாடையில் வைத்து வருங்காலத்துச் சாக இருப்பர் சுமந்து வருவர். உடம்பு இவ்வளவு நிலையாமையை உடையது ஆகும்.

**7.2.5 கணம் கொண்டுசுற்றத்தார் கல்லென் றலறப்**
**பிணம் கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும் - மணங்கொண்டீன்**
**டுண்டுண்டுண் டென்னும் உணர்வினாற் சாற்றுமே**
**டொண்டொண்டொன்றும் பறை.**

தன்மதிப்பீட்டு வினா
12. பறை நமக்கு எதனை அறிவிக்கிறது?

உறவினர் ஒன்றாகத் திரண்டு நின்று கதறி அழ இறந்தவர் பிணம் இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்படும். இதனைப் பலமுறை பார்த்தும், இல்வாழ்க்கையில் இன்பம் உண்டு என்று நம்பித் திருமணம் செய்து வாழ்க்கையில் வாழ்வார்க்கு அவ்வாசையை விடு, விடு எனப் பறை டொண், டொண், டொண் என்று ஒலித்துக் கொண்டே இருக்கும்.

**7.2.6 நார்த் தொடுத்து ஈர்க்கில் என்? நன்று ஆய்ந்து அடக்கில் என்?**
**பார்த்துழிப் பெய்யில் என்? பல்லோர் பழிக்கில்என்?**
**தோற்பையுள் நின்று, தொழில் அறச் செய்து ஊட்டும்**
**கூத்தன் புறப்பட்டக்கால்.**

தோலால் ஆகிய பை போன்ற உடலின் உள் இருந்து எல்லாத் தொழில்களையும் செய்த உயிராகிய கூத்தன் அவ்வுடம்பை விட்டுப் போனபின்பு நாரால் கட்டி இழுத்தாலென்ன? நல்ல இடமாகப் பார்த்து ஆராய்ந்து பார்த்து அடக்கம் செய்தாலென்ன? உயிரைக் கண்ட இடத்தில் போட்டாலென்ன? பலரும் பழித்தாலென்ன? உயிரற்ற உடலுக்கு என்ன செய்தாலும் உடல் அவற்றை உணராது.

**7.2.7 படுமழை மொக்குளின் பல்காலும் தோன்றிக்**
**கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித் - தடுமாற்றம்**
**தீர்ப்பேம்யாம் என்றுணரும் திண்ணறி வாளரை**
**நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்.**

தன்மதிப்பீட்டு வினா
13. நீர்க்குமிழி போன்றது எது?

பெருமழையானது நீர்ப்பெருக்காக ஓடும்பொழுது தோன்றும் குமிழி அடுத்த சில கணங்களில் உடைந்துவிடும். உடலும் நீர்க்குமிழி போன்றதே. உடலின் நிலையாமையை நன்கு அறிந்து பிறவித் தடுமாற்றத்தை நாம் ஒழித்துவிடுவோம் என்று உணரும் திண்மை மிக்க அறிஞர்க்கு நிகரானவர் இவ்வுலகில் யாரும் இல்லை.

**7.2.8 யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்தாம் பெற்ற**
**யாக்கையால் ஆய பயன்கொள்க - யாக்கை**
**மலையாடு மஞ்சுபோல் தோன்றிமற் றாங்கே**
**நிலையாது நீத்து விடும்.**

மலையின்மீது அசைகின்ற மேகம் போல உடம்பானது நிலையின்றி அழிந்துவிடும். ஆதலால் இத்தகைய நிலையில்லாத உடம்பினை உறுதியுடையதாகப் பெற்றவர்கள் தாங்கள் பெற்ற உடம்பினால் பெறுவதற்குரிய வீடுபேறாகிய பயனைப் பெறுவார்களாக.

**7.2.9 புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி**
**இன்னினியே செய்க அறவினை - இன்னினியே**
**நின்றான்; இருந்தான்; கிடந்தான்; தன் கேளலறச்**
**சென்றான் எனப்படு தலால்.**

இப்பொழுதுதான் நின்று கொண்டிருந்தான்; உட்கார்ந்து கொண்டிருந்தான்; படுத்துக் கொண்டிருந்தான். இதற்குள் உறவினர், அழுது புலம்பும்படி இறந்துவிட்டான் என்று ஒருவனைக் குறித்து உலகம் பேசுகிறது. புல்லின் நுனியில் ஒட்டிக் கொண்டிருக்கும் பனித்துளி போல இந்த உடல் நிலையாமை உடையது. ஆகவே, அறச்செயல்களை விரைந்து செய்ய வேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
14. 'இன்னினியே செய்க அறவினை' - விளக்குக.

தன்மதிப்பீட்டு வினா 15. யாக்கை தமர்க்கொழிய நீத்து - விளக்குக.

**7.2.10 கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி**
**வாளாதே போவரான் மாந்தர்கள் - வாளாதே**
**சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல**
**யாக்கை தமர்க்கொழிய நீத்து.**

மக்கள் யாரும் கேட்காமலேயே உறவினராய்க் குடும்பத்தில் பிறந்து, கூடுகள் மரத்தின் கண்ணே இருக்கச் சொல்லாமலேயே வானில் நெடுந்தூரம் பறக்கும் பறவை போலத் தமது உடலானது உறவினரிடத்தில் கிடக்க, அதனை விட்டுச் சொல்லாமலே போய்விடுவர்.

## 7.3 கட்டுரை வினா-விடைகள்

**நாலடியார் கூறும் 'நிலையாமைத்' தத்துவத்தை விவரிக்க.**

இந்த உலகம் நிலையில்லாதது. யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வ நிலையாமை ஆகியன பற்றிச் சமணத்தின் கொள்கைகளை நாலடியார் அறத்துப்பாலின் தொடக்கத்தில் சுட்டுகிறது. நிலையாமை தத்துவத்தின் வழி துறவையும் வற்புறுத்துகிறது.

**செல்வம் நிலையாமை :**

'செல்வோம்' என்பதானல், 'செல்வம்' என்று பெயரிட்டனர் என்பர். அந்த வகையில் செல்வத்தின் நிலையில்லாத தன்மையை ஒன்றன் பின் ஒன்றாக நாலடியார் சுட்டுகிறது.

அறுசுவையான உணவினை மனைவியானவள் விரும்பி ஊட்ட, வகைவகையான உணவுகள் உள்ளமையால், மறுவாய் உணவினை வேண்டாம் என மறுக்கும் செல்வந்தரும் உணவுக்காக் கூழையாவது இரந்து உண்ணும் நிலை ஒரு நாள் வரும். குஞ்சரம் அமர்ந்து குடிவாழ்ந்தோரும், ஏழ்மை அடைவர்.

செல்வம், வண்டியின் சக்கரம்போல உருண்டு ஓடும்! அதனால், செல்வமுற்ற காலத்திலேயே பலரோடு உண்ணுகின்ற அறவழியைத் தொடர வேண்டும்.

யானைமீது ஏறிக் குடைநிழலில் சேனைத் தலைவர் பலருக்கம் தலைவராய் இருப்போரும் வினையின் காரணமாகத் தமது மனைவியையும் பகைவரிடத்து இழக்கும் அளவிற்கு இழிநிலை எய்துவர்.

வாழ்நாட்களின் பெரும்பகுதி கழிந்துவிட்டது. ஆகவே உயிரையும் உடலையும் பிரித்துச் செல்லும் கூற்றுவன் சினத்தோடு வந்து கவருவான். உயிரிழப்பதற்கு முன் அறம் செய்தல் வேண்டும்.

பொருள் கிடைத்தவுடன் அறம் செய்தல் வேண்டும். இல்லையெனில் குற்றமற்ற கொடிய கூற்றுவன் விரைந்து கவர்ந்து சென்றுவிடுவான்.

எவ்வளவுதான் பொருளைத் தேடி வைத்திருந்தாலும் உயிரின் வாழ்நாள் மிகக் குறைவானது ஆகும். இயமனுக்குத் தப்பி உயிர்வாழ்தல் மிகவும் கடினம் ஆகும். சூரியன் தோன்றும் வாழ்நாளில் குறிப்பிட்ட அளவினை மட்டுமே வாழும் வாழ்நாள் உண்டு. ஆகவே, நிலையில்லாத செல்வத்தைப் பிறருக்கு அளிக்கும் அறத்தைச் செய்தல் வேண்டும்.

**இளமை நிலையாமை :**

நல்ல அறிவினை உடையவர்கள், நரை வருமென்று கருதி, இளம் பருவத்திலேயே பற்றுக்களை விட்டனர். அவ்வாறு விடாதவராய்க் குற்றம் நீங்காததும், நிலையில்லாததுமான இளமைப்பருவத்தில் மகிழ்ந்து கிடந்தவர்கள், கோலை ஊன்றிக் கொண்டு எழ முயல்வர்.

நண்பர்களும் மகளிரும் கொண்டிருக்கும் அன்பானது குறையுமாறு இளமை நீங்கும். இளமையை விரும்பி வாழ்ந்தாலும் அது நீங்கக் கூடியதே ஆகும்.

சொல்தளர்ந்து, தடியை ஊன்றிக் கொண்டு தளர்ந்த நடையினை உடையவராய்ப் பற்கள் விழப்பெற்று இவ்வுடம்பாகிய பொருள் பழிக்கப்படுமளவும் இல்வாழ்க்கையிலேயே தங்கி ஆசையில் உழன்று கொண்டிருக்கும் அறிவினை உடையர்க்குப் பாதுகாவலாய்ச் செல்ல வேண்டும்.

உடலானது கூனி வளைந்தும் தளர்ந்தும் தலை நடுங்கியும் தடியினை ஊன்றி நடக்கும் முதுமை உண்டாகும்.

தாயாக இருந்தவள் பிள்ளையைப் பெற்றுவிட்டு இங்குவிட்டு மேலுகம் செல்வாள். புதிதாகப் பிறந்த உயிரும் இறந்துபோகும்.

பலிகடாவினைப் போல உடலின் இளமை கழியும் என்று தெரிந்தும் அறிவுடையவர்கள் மகிழ்ச்சியை மட்டும் உடையவர்கள் இல்லை.

இளம்பருவம் குளிர்ச்சி உடைய சோலை போன்றது எனத் தோன்றினாலும், கூன்விழுந்து, உடல் வளைந்து, கைத்தடியையே கண்ணாகக் கொள்ளும் முதுமை வந்து சேரும்.

ஆட்களைத் தேடிப் பார்த்துத் திரியும் அருளில்லாத இயமன் என்பவன் இவ்வுலகில் உள்ளான். இளம்பருவமாயிருப்பினும் அவன் அதனை விட மாட்டான். ஆகவே, இளமையானது நிலையில்லாதது ஆகும்.

**யாக்கை நிலையாமை :**

உடல் நிலையில்லாதது ஆகும். யானையின் மீது ஏறியிருக்கும் மன்னரும் இவ்வுலகில் நிரந்தரமாக இல்லாது இறந்துபடுவர்.

வாழ்நாளை அளக்கின்ற சூரியன் தோன்றும் நாள் எல்லாம் இவ்வுலகில் இறப்பு என்பதும் உண்டு. யாக்கை என்னும் உடல் நிலையற்றது ஆகும். மணநாள் அன்றே மணவிழாவின் மங்கலஓசை பிணநாள் பறையாக ஒலிக்கும் அளவு இவ்வுடல் நிலையில்லாதது ஆகும்.

இறந்து பிறகு பறை அடித்து, இவ்வுடலைச் சுமந்து சென்று தீயிலே வைப்பர். இறந்தபிறகு உடல் அழிந்துவிடும். இறக்கும்போது ஒலிக்கும் பிணப்பறை உடலின் நிலையற்ற தன்மையை எடுத்துரைக்கும்.

உயிர் என்னும் கூத்தன் அழிந்துபோனால் உயிர்பிரிந்த உடலை நாரில்கட்டி இழுத்தாலும், அடக்கம் செய்தாலும்,. கண்ட இடத்தில் போட்டாலும், பலரும் பழித்தாலும் வேறுபாடு ஏதொன்றும் இல்லை.

மழைநீர்க் குமிழ் போல் இவ்வுடல் அழிந்துபோகும் தன்மை உடையது. மேலும், அசைகின்ற மேகம் போல உடல் அழிந்து போவது ஆகும்.

இப்பொழுதான் நின்றான்; நடந்தான்; உட்கார்ந்தான்; படுத்தான் என உறவினர் கூறினாலும், இந்த உடல் உயிரை இழந்து நிற்கும். யாரது விருப்பமும் வேண்டுதலும் இல்லாமல் பிறக்கும் உயிர் நீங்கினால் உடம்பானது உறவினரிடத்து இருக்கப் பிரிந்து செல்லும் தன்மையது.

இவ்வாறு, செல்வம், இளமை, யாக்கை ஆகியவற்றின் நிலையில்லாத் தன்மையை எடுத்துரைத்து, அறத்தை வலியுறுத்தும் பான்மை எண்ணத்தக்கது ஆகும்.

**2. நாலடியார் அறம் புரிவதற்குக் கூறும் காரணங்கள் யாவை?**

(அல்லது)

**நாலடியார் வலியுறுத்தும் அறக்கோட்பாட்டை எடுத்துரைக்க.**

மேலே கண்ட வினாவின் பதிலை எழுதி இறுதியில்,

**இன்னினியே செய்க அறவினை (29:2)**
**பகடு நடந்தகூழ் பல்லாரோடு உண்க (2:2)**

**பெரும்பொருள் வைத்தீர் - வழங்குமின் (6;6)**
**ஆற்ற அறம் செய்து அருளுடையீர் ஆகுமின் (7:3)**
**... கரவாது அறம் செய்ம்மின் (19:2)**
**வாழ்நாள் உலவாமுன் ஒப்புரவு ஆற்றுமின் (22:2-3)**

என்ற தொடர்களைப் பொருளோடு எழுதவும்.

## 7.4 தன்னறி வினாவிடைக் குறிப்புகள் :

1. 7.1.1
2. 7.1.2
3. 7.1.3
4. 7.1.5
5. 7.1.6
6. 7.1.7
7. 7.1.8
8. 7.1.9
9. 7.1.10
10. 7.2.1
11. 7.2.2
12. 7.2.3
13. 7.2.5
14. 7.2.7
15. 7.2.9

## 7.5 வினாக்கள் :

1. இளமை நிலையாமை குறித்த கருத்துக்களைத் தொகுத்து எழுதுக.
2. நாலடியாரின் நற்றமிழ்த் திறத்தைச் சான்றுடன் விளக்குக.
3. 'தாய்' வழி நாலடியார் உணர்த்தும் நிலையாமை எது? விளக்குக.

4. 'வெறியயர் களத்து ஆடு' எதற்கு உவமை ஆகிறது, விளக்குக.

5. இளமை நிலையில்லாதது என்பதன் வழி நாலடியார் நமக்கு வலியுறுத்துவது எதனை? விளக்குக.

6. இறப்பிலிருந்து தப்புபவர் உண்டா? விளக்குக.

7. மணப்பறை, பிணப்பறை வழிப் புலனாவது எது?

8. 'செத்தாரைச் சாவார் சுமந்து' – விளக்குக.

9. 'டொண்டொண் எனும்பறை!' – விளக்குக.

10. 'படுமழை மொக்குள்' – பொருள் கூறுக. எதற்கு உவமை இஃது?

11. யாக்கையின் பயன் யாது?

12. இன்னினியே செய்க அறவினை! – ஏன்?

13. நாலடியார் கூறும் நிலையாமைத் தத்துவத்தை விளக்குக.

14. துறவறத்திற்குரிய காரணங்களாக நாலடியார் கூறுவன யாவை?

# அலகு 8 : பழமொழி நானூறு

**அறிமுகம் :**

மக்களிடையே வழங்கி வந்த பழமொழிகள் வழி அறக்கருத்துக்களை வலியுறுத்தும் பழமொழி நானூறு பற்றியதாக இப்பாடம் அமைகிறது.

**நோக்கம் :**

1. மக்களிடையே வழக்கில் இருந்த பழமொழி இலக்கியமான முறைமையைத் தெரிந்து கொள்ளுதல்.
2. பழமொழிப் பாடல்கள் வழி அறக்கருத்துக்களை அறிதல்.

## பாட அமைப்பு :

8.0.1 பழமொழி நானூறு – அறிமுகம்

8.1.1 பழமொழி நானூறு – முதற்செய்யுள் தொடங்கி பத்தாம் செய்யுள் வரை.

8.2 பழமொழி பதினோராம் செய்யுள் தொடங்கி இருபதாம் செய்யுள் வரை.

8.3 தன்மதிப்பீட்டு வினா–விடை குறிப்புகள்.

### 8.0.1 அறிமுகம்

தொல்காப்பியம் கூறும் இலக்கிய வகைகளுள் ஒன்று பழமொழி. தொல்காப்பியர் இலக்கிய வகைகளைச் சுட்டும்போது 'முதுசொல்' எனக் குறிப்பிடுவார் அதற்கு விளக்கம் தரும்போது,

**"நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்**
**ஒண்மையும் என்று இவை விளங்கத் தோன்றிக்**
**குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்**
**ஏது நுதலிய முதுமொழி என்ப (தொல். 1433)**

என்று நுட்பமும் சுருக்கமும் கொண்டு செறிவாக ஏதேனும் பொருளை விளக்குமாறு கூறுவது பழமொழி என விளக்கம் சுட்டுகிறது.

தன்மதிப்பீட்டு வினா
1. முதுசொல் விளக்குக.

8.0.2 பழமொழியை அடிப்படையாக வைத்துச் செய்யுள் தோறும் விளக்கமுற அமைந்துள்ளது இந்நூல்! இதனைப் பழமொழி 400 என்றும் சுட்டுவர்.

தன்மதிப்பீட்டு வினா
2. பழமொழி ஆசிரியர் குறித்து எழுதுக.

8.0.3 இந்நூலின் ஆசிரியர் முன்றுறையரையனார் முன்றுறை என்ற இடத்தின் அரசன் என்ற பொருளில் இப்பெயர் அமைந்துள்ளது என்பர். 'அரையர்' என்ற இனம் சார்ந்தவராகவும் இருக்கலாம் என்பர்.

8.0.4 நானூறு பாடல்கள் உள்ளன. பழமொழி நானூற்றுப்பாடல்கள் பலவற்றில் பொது இயல்பு ஒன்று காணப்படுகிறது. பழமொழி, பாடலின் இறுதியில் அமைகின்றது. முன் இரண்டு அடிகளில் அதற்கு உரிய விளக்கத்தைக் காணலாம். மூன்றாம் அடியில் பெரும்பாலும் ஆடூஉ முன்னிலை, மகடூஉ முன்னிலைத் தொடர்களுள் ஒன்று இடம் பெறுகிறது.

8.0.5 ஒவ்வொரு பாடலும் முத்தகச் செய்யுளாக அமைகின்றது. அதாவது, தனித்தனிப் பொருள் உடையனவாக அமைகின்றன.

8.0.6 கரிகாலன், பாரி, பேகன் முதலியவர்கள் பற்றியும் பொற்கைப்பாண்டியன், மனுநீதிச் சோழன் முதலியவர்கள் வரலாறு பற்றியும் செய்திகள் காணப்படுகின்றன. உரைகள் வழியும் பழமொழிச் செய்யுள்கள் பல பெறப்பட்டன.

8.0.7 ஒருசில பாடல்களில் பழமொழி இல்லாமலும் உள்ளது. முதல் இருபது பாடல்கள் நமக்குப் பாடமாக உள்ளன.

## 8.1.0 தற்சிறப்புப் பாயிரம் :

'முன்றுறை என்ற பகுதியை ஆளும் அரசன் அசோகமரத்தின் நிழலில் அமர்ந்து இருக்கும் அருகப்பெருமானின் திருவடிகளை வணங்கி, நாட்டில் பண்டுதொட்டு வழங்கி வரும் நானூறு பழமொழிகளைத் தெரிவு செய்து இனிமை உடைய நான்கு அடிகளில் அமைந்த நானூறு வெண்பாக்களை இயற்றினான்' எனத் தற்சிறப்புப் பாயிரம் உரைக்கிறது.

**8.1.1 அரிது அவித்து, ஆசு இன்று உணர்ந்தவன் பாதம்**
**விரிகடல் சூழ்ந்த வியன் கண்மா ஞாலத்து**
**உரியதனில் கண்டு உணர்ந்தார் ஒக்கமே-போல**
**பெரியதன் ஆவி பெரிது.**

தன்மதிப்பீட்டு வினா
3. பெரியதன்ஆவி பெரிது! - விளக்குக?

விரிந்த கடலால் சூழப்பட்ட மிகப்பெரிய உலகில் குற்றங்களை நீக்கி முற்றும் உணர்ந்தவன் திருவடிகளை உரிமைப் பொருளைப் போலக்

கண்டு உணர்ந்து கொண்டால் உயர்வு ஏற்படும். அது பெரிய உடம்பை உடைய ஆவியைப் போன்றதாகும்.

**8.1.2 கல்லாதான் கண்ட கழி நுட்பம் கற்றார்முன்**
**சொல்லுங்கால், சோர்வு படுதலால், நல்லாய்**
**வினா முந்துறாத உரை இல்லை; - இல்லை**
**கனா முந்துறாத வினை.**

நல்ல பெண்ணே! நல்ல விடை கிடைக்க வேண்டுமானால் வினா எழுப்பும் திறன் வேண்டும். வினா இன்றி விடை இல்லை. நற்செயலைச் செய்து சாதிக்க வேண்டும் என்றால், அச்செயல் பற்றிய கனவும் நினைவும் திட்டமும் வேண்டும். முன்திட்டம் இல்லாத செயல் வெற்றி பெறுவது இல்லை. அதுபோல, கற்றார் அவையில் சிறப்புடன் பேசுவதற்குக் கல்வியறிவு வேண்டும் கல்லாதவனின் பேச்சு வெற்றி பெறாது.

**8.1.3 கல்வியான் ஆயகழி நுட்பம், கல்லார்முன்**
**சொல்லிய நல்லவும் தீயஆம் - எல்லாம்**
**இவர் வரைநாட - தமரை இல்லார்க்கு**
**நகரமும் காடு போன்றாங்கு.**

அனைவரும் விரும்பும் மலை நாடனே! நெருக்கமான நண்பர்களும் உறவினர்களும் பெற்று இனிமையாக வாழ்ந்தவர்கள், அவர்கள் யாரும் இல்லாத ஒரு பெரு நகருக்குச் சென்று வாழும்போது, அந்நகரம் காடு போலவே இருக்கும் அதுபோலக் கற்றறிந்த அறிஞர்கள் தாம் கண்ட நுட்பமான கருத்துக்களை அவற்றின் அருமை உணராத கல்லாதவர் முன் சொன்னால், அவர் சொன்ன நல்லனவும் கல்லாத அறிவில்லாதார்க்குத் தீயனவாகவே அமையும். கூறிய அறிஞர்களுக்கும் மகிழ்ச்சி இருக்காது.

தன்மதிப்பீட்டு வினா
4. தமர் இல்லார்க்கு நகரம் எவ்வாறு இருக்கும்?

**8.1.4 கேட்பாரை நாடி, கிளக்கப்படும் பொருட்கண்**
**வேட்கை அறிந்து, உரைப்பார், வித்தகர் - வேட்கையால்**
**வண்டு வழிப்படரும் வாள் கண்ணாய்! தோற்பன**
**கொண்டு புகாஅர் அவை.**

வண்டுகளால் விருப்பப்படும் வாள்போல ஒளிரும் கண்களை உடைய பெண்ணே! அறிஞர் தாம் சொல்ல முற்படும் கருத்தைச் சொல்லுதற்குத் தகுதி உடையவரா? விருப்பம் உடையவரா? என்று ஆராய்ந்த பின்பே ஒரு கருத்தைச் சொல்ல முற்படுவர். சபையில் தோற்கப் போகும் சொற்களைக் கூற மாட்டார்கள்.

தன்மதிப்பீட்டு வினா
5. அறிவுடையார் எச்சொல்லைச் சபையில் கூறுவர்?

**8.1.5 புலம் மிக்கவரைப் புலமை தெரிதல்**
**புலம் மிக்கவர்க்கே புலனாம்; நலம் மிக்க**
**பூம் புனல் ஊர! - பொதுமக்கட்கு ஆகாதே**
**பாம்பு அறியும் பாம்பின் கால்.**

தன்மதிப்பீட்டு வினா
6. பாம்பறியும் பாம்பின்கால் - விளக்குக.

பூக்கள் நிரம்பிய நீர்நிலை உடைய ஊரனே! எளிய மக்களுக்கு அறிவு உடையவர்களை அறிந்து கொள்ள முடியாது. அறிவு உடையவர்களை அறிவுடையவர்களே அறிவர். பாம்பு சென்ற வழியைப் பாம்பே அறியும். அது போன்றே அறிவுடையவரை அறிவுடையவரே அறிவர்.

**8.1.6 ஈனுலகத்து ஆயின், இசைபெறூஉம் அஃது இறந்து ஏனுலகத்து ஆயின், இனிது அதூஉம், தான் ஒருவன் நாள்வாயும் நல் அறம் செய்வார்க்கு இரண்டுஉலகும் வேள்வாய் கவட்டை நெறி.**

ஒவ்வொரு நாளும் தங்களால் முடிந்த அளவிற்கு அறம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்தால் இவ்வுலகில் இனிமையும் புகழும் கிடைக்கும். மறுமை உலகிலும் இனிமையும் புகழும் கிடைக்கும். ஓர் இடத்தை அடைய இரண்டு வழிகள் போன்றது ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
7. 'கவட்டை நெறி' எது? - விளக்குக.

**8.1.7 ஆஅம் எனக்கு எளிது என்று, உலகம் ஆண்டவன் மேஎந் துணை அறியான், மிக்கு நீர் பெய்து இழந்தான் தோஒம் உடைய தொடங்குவார்க்கு இல்லையே தாஅம் தரவாரா நோய்.**

நீதி நெறிகளிலும் அரசியல் நூல்களிலும் வல்ல அமைச்சர்களைக் கலந்து ஆலோசிக்காமல், தன்னால் எல்லாம் முடியும் என எண்ணி வாக்களித்தான் மாவலி! அதன் விளைவாகத் தான் ஆண்ட உலகத்தோடு, தன்னையும் அளிக்க வேண்டியிருந்தது. எனவே, குற்றம் உடைய சொற்களைத் தொடங்கிச் செய்பவர்க்கு எல்லாவகையிலும் துன்பம் வந்து சேரும்.

**8.1.8 எந் நெறியானும் இறைவன் தன் மக்களைச் செந்நெறிமேல் நிற்பச் செயல் வேண்டும், அந்நெறி மான்சேர்ந்த நோக்கினாய் - ஆங்க, அணங்குஆகும் தான் செய்த பாவை தனக்கு.**

தன்மதிப்பீட்டு வினா
8. அரசன் யாது செய்ய வேண்டும்?

மானைப் போன்ற மருண்ட விழியை உடையவளே! சிற்பியானவன் தான் வடித்தெடுத்த பொற்சிலையைக் கோவிலில் வைத்தபின் வணங்கி வழிபடுதல் வேண்டும். அதுபோல் நன்னெறியில் தனது மக்களை வாழ வைக்கும் அரசன், அவர்களை வணங்கி வாழ்த்தல் வேண்டும்.

**8.1.9 திருந்தாய் நீ, ஆர்வத்தை! தீமை உடையார் வருந்தினார் என்றே வயப்படுவது உண்டோ? அரிந்து அரிகால் பெய்து அமையக் கூட்டியக் கண்ணும் பொருந்தா மண் ஆகா சுவர்.**

தன்மதிப்பீட்டு வினா
9. 'பொருந்தாமண் சுவர் ஆகுமா!' - விளக்குக.

வைக்கோலையும் மண்ணையும் சேர்த்துச் சுவர் எடுக்கின்றபோது மண் இறுகிப் பொருந்தி அமைதல் வேண்டும். பொருந்தாமல் மண் பிரிந்து இருக்குமானால் அவற்றை வைத்து உருவாக்கும் சுவரும் நிற்காது. அதுபோலத் தீய குணம் உடையவரும் துன்பம் உற்று வருந்துகிறார் என்று எண்ணுதல் முடியாது. அவரை நம்புதல் கூடாது.

**8.1.10 பெரிய நட்டார்க்கும் பகைவர்க்கும் சென்று**
**திரிவு இன்றித் தீர்ந்தார்போல் சொல்லி, அவருள்**
**ஒருவரோடு ஒன்றி ஒருப்படாதாரே**
**இரு தலைக் கொள்ளி என்பர்.**

தன்மதிப்பீட்டு வினா
10. 'இருதலைக் கொள்ளி' யார்?

நெருக்கமான தோழமை உடையவர்க்கும் அதிகமான பகை உடையர்க்கும் வேற்றுமை இன்றி, ஒன்றுபோலப் பேசிப் பழகி வருபவர்கள் இருவரில் யாரிடமும் ஒன்றாதவர்கள். இவர்களை 'இருதலைக் கொள்ளி' என்றழைத்து, விலக்குவர்.

**8.2.1 மிக்குப் பெருகி, மிகுபுனல் பாய்ந்தாலும்**
**உப்பு ஒழிதல் செல்லா ஒலி கடல்போல் மிக்க**
**இனநலம் நன்கு உடைய ஆயினும், என்றும்**
**மன நல ஆகாவாம் கீழ்.**

மிகுதியாகப் பெருகி ஆற்று வெள்ளம் கடலுள் கலந்தாலும், கடலானது உப்புச் சுவையை விடாது. அதுபோல மனத்தால் கெட்டுப் போனவர்கள் உயர்ந்த நல்ல குணமுடைய சான்றோர்களைச் சந்தித்தாலும் தங்களது கீழ்மைக் குணத்தை விட மாட்டார்கள்.

'ஆறெல்லாம் வெள்ளம் அடுத்து மடுத்தாலும்
நீர் நல்லதாமோ கடல்' என்பது பழமொழி!

**8.2.2 விழும் இழை நல்லார் வெருள் பிணைபோல் நோக்கம்**
**கெழுமிய நாணை மறக்கும் தொழுநையுள்**
**மாலையும் மாலுள் மயக்குறுத்தாள், ஆஃதால், அச்**
**சால்பினைச் சால்பு அறுக்குமாறு.**

தன்மதிப்பீட்டு வினா
11. 'சால்வினைச் சால்பு அறுக்குமாறு!' - விளக்குக.

யமுனை ஆற்றங்கரையில் திருமாலை நப்பின்னை தனது அழகால் மயங்கச் செய்தாள். சிறப்பான ஒன்றை மேலும் சிறப்பான ஒன்று தன் பக்கம் ஈர்த்துவிடும். அதுபோல அழகிய அணிகலன்களை அணித்த நல்ல பெண்களின் மருண்ட விழிகள் நாணம் மிக்குடைய ஆடவரையும் மயக்கிவிடும், அவர்தம் அறிவை மறையச் செய்துவிடும்.

தன்மதிப்பீட்டு வினா
12. 'சுழிவிழாத் தோள் ஏற்றுவார்!' - விளக்குக.

**8.2.3 பாப்புக் கொடியாற்குப் பால்மேனியான் போலத்**
**தாக்கி அமருள் தலைப்பெய்யார், போக்கி**
**வழியராய் நட்டார்க்கு மாதவம் செய்வாரே**
**கழி விழாத் தோள் ஏற்றுவார்.**

பாம்புக் கொடியுடைய துரியோதனனுக்கு நட்புடையவன் பலராமன். போர்க்காலத்து துரியோதனனுக்கு உதாவாமல் பலராமன் தீர்த்தயாத்திரை சென்று விட்டான். இவ்வாறு நண்பருக்கு உதவி செய்யாமல் விலகிக் கொள்பவர், கோவில் திருவிழா முடிந்தபிறகு சிறுவர்களைத் தோளில் தூக்கிக்கொண்டு விழாவினைக் காணச் செல்லுதற்கு ஒப்பாகும்.

தன்மதிப்பீட்டு வினா
13. நாய், முயல் வழி பழமொழி உரைப்பன யாவை?

**8.2.4 தாம் நட்டு ஒழுகுதற்குத் தக்கார் என வேண்டா**
**யார் நட்பது ஆயினும் நட்புக் கொளல் வேண்டும்**
**கான் அட்டு நாறும் கதுப்பினாய்-தீற்றாதோ**
**நாய், நட்டால் நல்ல முயல்!**

மிக்க மணம் உடைய பூக்கள் நிரம்பிய காட்டில் நிலவும் நறுமணத்தை விட மணக்கும் தலைமுடியை உடையவளே! நாயாக இருந்த போதிலும் அதனோடு நல்ல நட்பினை வளர்த்துக் கொண்டால் அது அழகிய முயலைப் பற்றித் தரும் ஆற்றல் உடையது. தாழ்ந்த விலங்காக இருப்பினும் நட்புக் கொள்ளுதல் நமக்கு உதவும் முறைமையில் அமையும்.

தன்மதிப்பீட்டு வினா
14. 'உறற்பால யார்க்கும் உறும்!' - விளக்குக.

**8.2.5 அம்கண் விசும்பின் அகல் நிலாப் பாரிக்கும்**
**திங்களும் தீங்குறுதல் காண்டுமால் - பொங்கி**
**அறைப்பாய் அருவி அணிமலை நாட**
**உறற்பால யார்க்கும் உறும்.**

கற்பாறை மீது பொங்கி விழும் அருவிகள் உள்ள மலை நாடனே! அழகிய மிகப்பெரிய வானத்தில் ஒளிவீசிக் கொண்டு இருக்கும் வெண்ணிலாவை இராகு, கேது என்னும் பாம்புகள் விழுங்குகின்றன. அத்துன்பத்திலிருந்து நிலவால் விடுபட இயலவில்லை. ஆகவே, ஒருவர் அடையத்தகும் துன்பம் வந்தே தீரும்.

தன்மதிப்பீட்டு வினா
15. தம்கன்று சாக் கறப்பரோ? - விளக்குக.

**8.2.6 நண்பு ஒன்றித் தம்மாலே நாட்டப் பட்டார்களை**
**கண்கண்ட குற்றம் உள எனினும் காய்ந்தீயார்**
**பண்கொண்டதீம் சொல் பணைத்தோளாய் - யார் உளரோ**
**தம்கன்று சாக் கறப்பார்.**

இசைபோன்ற இனிய சொற்களையும், மூங்கில் போன்ற பணைத் தோள்களையும் உடைய பெண்ணே! பசுவிடம் இருந்து பாலைக் கறப்பவர் கன்று சாகுமாறு அதற்குப் பால் ஊட்டாமல், பாலைக் கறக்க மாட்டார்கள். அதுபோல அன்பில் ஒன்றுபட்ட நண்பர்களிடம் குறை இருந்தாலும் நல்லோர் நண்பர்கள்மேல் வெறுப்புக் கொள்ள மாட்டார்கள்.

**8.2.7 உள்ளது ஒருவர் ஒருவர் கை வைத்தக்கால்**
**கொள்ளும் பொழுதே கொடுக்க, தாம் கொள்ளார்**
**நிலைப்பொருள் என்று அதனை நீட்டித்தல் வேண்டா**
**புலைப்பொருள் தங்கா, வெளி.**

ஒருவர் ஏதாவது ஒரு காரணத்தினால் தன்னிடம் உள்ள அரிய பொருளைப் பிறரிடம் அளித்துக் பாதுகாப்பாக வைத்திருங்கள், பிறகு பெற்றுக் கொள்கிறேன் என ஒப்படைத்தால் அதனைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் கேட்கும்போது அதனை அளிக்க வேண்டும். காலம் நீட்டித்தல் கூடாது. புலால் நாற்றம் உடைய இறைச்சியை மறைத்தாலும் அதன் தீயநாற்றம் அதனை வெளிப்படுத்திவிடும்.

**8.2.8 தக்காரோடு ஒன்றி, தமராய் ஒழுகினார்,**
**மிக்காரால் என்று சிறியாரைத் தாம் தேறார்**
**கொக்கு ஆர்வள வயல் ஊர! தினல் ஆமோ**
**அக்காரம் சேர்ந்த மணல்?**

தன்மதிப்பீட்டு வினா
16. சர்க்கரை சேர்த்த மண் தின்னற்கு உரியதா? ஆய்க.

கொக்குகள் நிறைந்த வளமான வயல்களை உடைய ஊரைச் சார்ந்தவனே! தகுந்த நல்லவர்களோடு நெருங்கி, உறவினரைப்போல நெருக்கமாக வாழ்வதனாலேயே தீயகுணம் உடையவர் நல்லவர்களாகி விட முடியுமா? மணலும் சர்க்கரையும் ஒன்றுபோல இருந்தாலும், இரண்டையும் கலந்து உண்ணுதல் இயலாதது ஆகும்.

**8.2.9 கறுத்து ஆற்றித் தம்மைக் கடிய செய்தாரைப்**
**பொறுத்து ஆற்றிச் சேறல் புகழால், ஒறுத்து ஆற்றின்**
**வான்ஓங்கு உயர் வரை வெற்ப - பயம் இன்றே**
**தான் தோன்றிட வரும், சால்பு.**

விண்ணளவு உயர்ந்த மலை நாட்டுத் தலைவனே! நம்மீது ஆத்திரம் கொண்டு தீங்கு செய்தவர்களையும் பொறுத்துப் போதலே ஒருவருக்கு நன்மைதருவதாகும். மாறாகத் தீமை செய்தவற்குத் தீமை செய்ய முற்படுதல் நற்பயனைத் தராது.

**8.2.10 காவலனை ஆக வழிபட்டார், மற்று அவன்**
**ஏவல் வினை செய்திருந்தார்க்கு உதவு அடுத்தல்**
**ஆஅனைய நின்றதன் கன்று, முலை இருப்ப**
**தாய் அணல் தான் சுவைத்தற்று.**

தன்மதிப்பீட்டு வினா
17. தாய் அணல் சுவைத்தற் போன்றது எது? - விளக்குக.

அரசாட்சி புரியும் அரசனைப் போற்றி வாழ்பவர்; அவரிடம் மட்டும் உரிய பொருள்களைப் பெறுதல் நல்லது. மாறாக, அரசரிடம் பணிபுரியும் ஏவலாளர்களிடம் உதவி பெற முற்படுவது தகாது. தாய்ப் பசுவின் மடியில் கன்றானது பால் குடித்தல் அல்லாது அணலைச் (கீழ்வாய் / தாடி / கழுத்து) சுவைத்து ஏமாறுவது போன்றது ஆகும்.

## 8.3 தன்மதிப்பீட்டு வினா-விடைக்குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 8.0.1 | 9. | 8.1.9 |
| 2. | 8.0.3 | 10. | 8.1.10 |
| 3. | 8.1.1 | 11. | 8.2.2 |
| 4. | 8.1.3 | 12. | 8.2.3 |
| 5. | 8.1.4 | 13. | 8.2.4 |
| 6. | 8.1.5 | 14. | 8.2.5 |
| 7. | 8.1.6 | 15. | 8.2.6 |
| 8. | 8.1.8 | 16. | 8.2.8 |
| | | 17. | 8.2.10 |

## 8.4 வினாக்கள்

1. 'பழமொழி நானூறு' - நூல் குறித்து விளக்குக.
2. பழமொழி நானூறு நூலின் தற்சிறப்புப்பாயிரம் எதனை உரைக்கிறது?
3. 'கனா முந்துறாத வினை!' - விளக்குக.
4. நகரம் காடாவது ஏன்? விளக்குக.
5. வேட்கை அறிந்து உரைப்பவர் யார்? ஏன்?
6. 'பாம்பறியும் பாம்பின் கால்!' - விளக்குக.
7. 'தாஅம் தர வாரா நோய்' - விளக்குக.
8. தான் செய்த பாவையைச் சிற்பி எப்போது வணங்குவான்? ஏன்?
9. இருதலைக் கொள்ளி யார்?
10. 'மனநல ஆகாவாம் கீழ்' - விளக்குக.
11. 'நாய் நட்டால் நல்ல முயல்!' - விளக்குக.
12. புலைப்பொருள் தங்கா வெளி - விளக்குக.
13. பயன்இன்றே தான் தோன்றிட வரும் சால்பு - விளக்குக.
14. பழமொழிகளின் சிறப்பைப் பாடப்பகுதி வழி விளக்குக.
15. எவையேனும் உனக்குத் தெரிந்த பழமொழிகள் ஏழனை எழுதுக.

# அலகு 9 : நான்மணிக்கடிகை

## அறிமுகம் :

நான்மணிக்கடிகை என்ற நீதிநூல் பற்றி இந்தப் பாடத்தில் அறிந்து கொள்கிறோம்.

## நோக்கம் :

1. நான்மணிக்கடிகை என்ற நீதிநூலின் அமைப்புப் பற்றி அறிதல்
2. செய்யுள்தோறும் நான்கு கருத்துக்கள் அமைகின்ற முறைமையை அறிதல்.
3. அறக்கருத்துக்கள், வாழ்வியல் விழுமியங்களை நான்மணிக் கடிகை நூலின் செய்யுள் வழி அறிதல்.

## பாடஅமைப்பு :

9.0 நான்மணிக்கடிகை – அறிமுகம்.

9.1 நான்மணிக்கடிகை – முதற்செய்யுள் தொடங்கி – பத்தாம் செய்யுள் வரை

9.2 நான்மணிக்கடிகை பதினோராம் செய்யுள் தொடங்கி – இருபதாம் செய்யுள் வரை.

9.3 தன்மதிப்பீட்டு வினா – விடைக்குறிப்புகள்.

9.4 வினாக்கள்.

## 9.0 நான்மணிக்கடிகை - அறிமுகம்

**9.0.1** பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் நான்மணிக் கடிகையும் ஒன்று.

**9.0.2** பெயருக்கு ஏற்றாற்போலப் பாடல்தோறும் நான்கு கருத்துக்கள் உள்ளன. 'மணி' என்னும் பொருள் பொருத்தமுடையது ஆகும். மணி மணியான நான்கு கருத்துக்களைக் கொண்டு பாடல்கள் இலங்குகின்றன.

**9.0.3** 101 பாடல்கள் உள்ளன. கடவுள் வாழ்த்தாக இரண்டு பாடல்கள் உள்ளன. இப்பாடல்களில் வைணவக் கடவுளான திருமாலின் லீலைகள் பற்றிய செய்திகள் சுட்டப்படுகின்றன. ஆகவே இந்நூலின் ஆசிரியர் வைணவ சமயம் சார்ந்தவராக இருக்கலாம் எனச் சுட்டப்படுகிறது.

**9.0.4** 'விளம்பிநாகனார்' என்ற பெயரில் 'விளம்பி' என்பது ஊர்ப்பெயராகும். நாகனார் என்பது இயற்பெயர்.

தன்மதிப்பீட்டு வினா
1. நான்மணிக் கடிகை ஆசிரியர் யார்?

**9.0.5** அறக்கருத்துக்களை வலியுறுத்தும் இந்நூலில் ஆடுஉ முன்னிலையும், மகடூஉ முன்னிலையும் உள்ளன.

இந்நூலில் எல்லாப் பாடல்களும் நான்கு கருத்துக்களைப் பெற்றுள்ளன.

## 9.1 கடவுள் வாழ்த்து :

திருமாலின் ஒளிமுகத்தைச் சந்திரன் கொண்டுள்ளான். அவர் திருக்கரத்தில் உள்ள சக்கரத்தைக் கிரணங்களைஉடைய சூரியன் கொண்டுள்ளான். அவனது திருக்கண்களை நீர் நிலைகளில் உள்ள தாமரைப் பூக்கள் கொண்டுள்ளன. அவனுடைய கண்களின் நிறத்தைக் காயம்பூ கொண்டுள்ளது. (1)

பாணாசுரனது எரியும் மதிலை அழித்த திருமால் பிரளயத்திலிருந்து காப்பதற்காகத் தன் வயிற்றில் உலகை வைத்தான்; மாபலி மன்னனை அடக்க இவ்வுலகைத் தன் அடிகளில் அளந்தான். கிருட்டின அவதாரத்தில் இந்திரன் மழை பெய்வித்தபோது, பசுக்களைக் காப்பதற்காகக் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான். (2)

தன்மதிப்பீட்டு வினா
2. திருமாலின் சக்கரத்தைக் கொண்டுள்ளவர் யார்?

இவ்வாறு திருமாலது பெருமைகள் சுட்டப்படுகின்றன. திருமாலைப் போற்றி வழிபடும் முறைமையில் இவ்விரு கடவுள் வாழ்த்துப் பாடல்களும்

உள்ளன.

**9.1.1 எள்ளற்க என்றும் எளியர் என்று! என்பெறினும்**
**கொள்ளற்க, கொள்ளார் கைமேற்பட!உள்சுடினும்**
**சீறற்க, சிற்றில் பிறந்தாரை! கூறற்க**
**கூறல்ல வற்றை விரைந்து!**

- ★ எளியர் என்று யாரையும் இகழ்தல் கூடாது.
- ★ மற்றவர் கையுயர்த்திக் கொடுக்க நீ கைதாழ்த்தி யாரிடமும் வாங்குதல் கூடாது.
- ★ எளிய குடியில் பிறந்தவர் வருத்தத்தைத் தந்தாலும் அவர்மேல் சினம் காட்டுதல் கூடாது.
- ★ எதனையும் அவசரப்பட்டுச் சொல்லுதல் கூடாது.

தன்மதிப்பீட்டு வினா
3. 'சீறற்க சிற்றில் பிறந்தாரை' - விளக்குக.

**9.1.2 பறைபட வாழா, அசுணமா, உள்ளம்**
**குறைபட வாழார், உரவோர், நிறை வனத்து**
**நெல்பட்ட கண்ணே வெதிர்சாம், தனக்கு ஒவ்வாச்**
**சொல்பட்டால், சாவதாம் சால்பு.**

- ★ பறையின் வல்லோசையைக் கேட்டால் அசுணப் பறவைகள் அழிந்துவிடும்.
- ★ பண்புடையவர்கள் தம்நிலை தாழ்ந்தால் மானம் இழந்து வாழமாட்டாகள்.
- ★ காட்டில் மூங்கில் வனம் தழைத்தால் நெற்பயிர் பட்டுப் போய்விடும்.
- ★ அதுபோல, பழிச் சொல் உண்டாயின் சான்றோர் வாழ மாட்டார்கள்.

தன்மதிப்பீட்டு வினா
4. அசுணமா எதனைக் கேட்டால் அழியும்?

**9.1.3 மண்ணி அறிப, மணி நலம், பண்அமைத்து**
**ஏறியபின் அறிப, மாநலம் மாசு அறச்**
**சுட்டு அறிப, பொன்னின் நலம் காண்பார் கெட்டு அறிப,**
**கேளிரான் ஆய பயன்.**

- ★ மணிகளின் தரத்தை நீரில் நன்கு கழுவிய பிறகே அறிந்துகொள்ள முடியும்.
- ★ சேணம் பூட்டி ஏறி அமர்ந்த பிறகே குதிரையின் வலிமை தெரியும்.

தன்மதிப்பீட்டு வினா
5. பொன்னின் சிறப்பை எவ்வாறு அறிவர்?

★ உருக்கிய பிறகுதான் தங்கத்தின் தரத்தை அறிய முடியும்.

★ இவை போல நாம் துன்பத்தில் அல்லலுறும் போதுதான் உறவினர்களின் உண்மையான அன்பு தெரியும்.

**9.1.4 கள்ளி வயிற்று இன்அகில் பிறக்கும், மான்வயிற்று
ஒள் அரிதாரம் பிறக்கும், பெருங்கடலுள்
பல் விலைய முத்தம் பிறக்கும், அறிவார்யார்,
நல் ஆள் பிறக்கும் குடி.**

தன்மதிப்பீட்டு வினா
6. நல்ஆள் பிறக்கும்குடி எது? விளக்குக.

★ மணம் தரும் அகில் கள்ளியின் வயிற்றில் பிறக்கும்.

★ சிறந்த அரிதாரம் மானின் வயிற்றில் பிறக்கும்.

★ பெருங்கடல் சிப்பியில் முத்து பிறக்கும்.

★ ஆகவே, நல்லவர் பிறக்கும் குடியை யார் அறிவார்கள்?

**9.1.5 கல்லில் பிறக்கும் கதிர்மணி, காதலி
சொல்லில் பிறக்கும் உயர்மதம் மெல்லென்
அருளில் பிறக்கும், அறநெறி, எல்லாம்
பொருளில் பிறந்து விடும்.**

தன்மதிப்பீட்டு வினா
7. காதலி சொல்லில் பிறப்பது எது?

★ மலையின் பாறைகளிலிருந்து மாணிக்கம் பிறக்கிறது.

★ காதலி பேசும் அன்பான சொல்லின்வழி இன்பம் பிறக்கிறது.

★ மென்மையான அருளிலிருந்து அறநெறி பிறக்கிறது.

★ செல்வத்திலிருந்து அறமும் இன்பமும் பிறக்கின்றன.

**9.1.6 திரு ஒக்கும் தீது இல் ஒழுக்கம்; பெரிய
அறன் ஒக்கும் ஆற்றின் ஒழுகல்; பிறனைக்
கொலை ஒக்கும், கொண்டு கண்மாறல்; புலை ஒக்கும்
போற்றாதார் முன்னர்ச் செலவு.**

தன்மதிப்பீட்டு வினா
8. புலை ஒப்பது எது?

★ ஒருவரிடம் உள்ள நல்லொழுக்கம் செல்வமாகும்.

★ நெறியுடன் வாழ்தல் அறச் செயலாகும்.

★ ஒருவனைப் பற்றிப் புறம் கூறுதல் அவனைக் கொலை செய்தற்கு ஒத்ததாகும்.

★ மதியாதார் வாசலை மிதிப்பது புலை வாழ்வு ஆகும்.

**9.1.7 கள்வம் என்பார்க்கும் துயில் இல்லை, காதலிமாட்டு உள்ளம் வைப்பார்க்கும் துயில் இல்லை, ஒண்பொருள் செய்வம் என்பார்க்கும் துயில் இல்லை, அப்பொருள் காப்பார்க்கும் இல்லை, துயில்.**

- ★ திருடுவதற்குத் திட்டமிடுபவனுக்குத் தூக்கம் வராது.
- ★ காதலியை எண்ணிக் கொண்டிருப்பவனுக்குத் தூக்கம் வராது.
- ★ பொருளைத் தேடி உயர முற்படுபவனுக்கும் தூக்கம் வராது.
- ★ நிறையப் பொருளைச் சேர்த்தவனுக்கும் அவற்றைக் காக்க வேண்டும் என்பதனால் கவலையால் தூக்கம் வராது.

தன்மதிப்பீட்டு வினா
9. யாருக்குத் துயில் இல்லை?

**9.1.8 கற்றார்முன் தோன்றா, கழிவு இரக்கம், காதலித்து ஒன்று உற்றார்முன் தோன்றா, உறாமுதல், தெற்றென அல்ல புரிந்தார்க்கு அறம் தோன்றா, எல்லாம் வெகுண்டார்முன் தோன்றாக் கெடும்.**

- ★ நடந்து முடிந்தவை பற்றிய நினைவுகளும் கழிவிரக்கமும் சான்றோர்களிடத்துத் தோன்றாது.
- ★ ஆர்வத்துடன் உழைத்து இலக்கை அடைந்தவுடன் இடையில் எற்பட்ட துன்ப நினைவுகள் எவையும் ஊக்கமுடையவர்களுக்கு தோன்றாது.
- ★ ஏனையவர்களுக்கு அல்லன செய்தவர்களுக்கு அறம் தோன்றாது.
- ★ முன்கோபம் உடையவர்களுக்கு எந்த நன்மையும் தோன்றாது.

தன்மதிப்பீட்டு வினா
10. வெகுண்டார் முன் எது தோன்றாது?

**9.1.9 நிலத்துக்கு அணி என்ப, நெல்லும் கரும்பும் குளத்துக்கு அணி என்ப, தாமரை; பெண்மை நலத்துக்கு அணி என்ப, நாணம் தனக்குஅணி தான்செல் உலகத்து அறம்.**

- ★ நல்ல நிலத்துக்கு அணி நெல்லும் கரும்பும் ஆகும்.
- ★ குளத்துக்கு அணி தாமரை ஆகும்.
- ★ பெண்ணுக்கு அணி நாணம் ஆகும்.
- ★ ஒருவனுக்குஅணி உலகத்தார்க்குச் செய்யும் அறம் ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
11. குளத்துக்கு அணி எது?

**9.1.10 கந்தில் பிணிப்பர், களிற்றை, கதம் தவிர
மந்திரத்தினால் பிணிப்பர், மாநாகம், கொந்தி
இரும்பின் பிணிப்பர், கயத்தை, சான்றோரை
நயத்தின் பிணித்து விடல்.**

தன்மதிப்பீட்டு வினா
12. இரும்பில் யாரைப் பிணிப்பர்?

★ யானையின் சினத்தை அடக்கக் கட்டுத்தறி உண்டு.

★ நாகத்தை மந்திரத்தால் கட்டிப் போடுவர்.

★ கயவரை இரும்பு விலங்கால் கட்டுவர்.

★ சான்றோரை இனிய சொற்களால் கட்டிப் போடலாம்.

**9.2.1 கன்றாமை வேண்டும், கடிய, பிறர் செய்த
நன்றியை நன்றாக் கொளல் வேண்டும், என்றும்
விடல் வேண்டும், தன்கண் வெகுளி, அடல் வேண்டும்
ஆக்கம் சிதைக்கும் வினை.**

தன்மதிப்பீட்டு வினா
13. என்றும் விடல் வேண்டுவது எது?

★ பிறர் செய்த துன்பங்களுக்காக அவர்மீது சீற்றங்கொள்ளுதல் கூடாது.

★ பிறர் செய்த நன்மையை மறவாது இருத்தல் வேண்டும்.

★ கோபப்படுவதனை எப்பொழுதும் விட்டுவிடுதல் வேண்டும்.

★ வளர்ச்சியைத் தடுக்கும் செயல்களைச் செய்யாது இருத்தல் வேண்டும்.

**9.2.2 பல்லினான் நோய் செய்யும் பாம்பு எல்லாம்; கொல்களிறு
கோட்டான் நோய் செய்யும் குறித்தாரை; ஊடி
முகத்தான் நோய் செய்வர், மகளிர், முனிவர்
தவத்தின் தருக்குவர், நோய்.**

தன்மதிப்பீட்டு வினா
14. பாம்பு எவ்வாறு பிறர்க்குத் தீங்கு இழைக்கும்?

★ பாம்பு பல்லின் வழி நோய் செய்யும்.

★ யானை தனது தந்தத்தால் நோய் செய்யும்.

★ பெண்கள் உடல் கொண்டு முகம் வாடி நோய் செய்வர்.

★ இவர்கள் அனைவரும் பிறருக்குத் துன்பம்தர, தவமுடையவர்களோ தமக்குத் தாமே வருந்தித் தமக்கே துன்பம் செய்து கொள்வர்.

**9.2.3 பறை நன்று, பண் அமையா யாழின்; நிறை நின்ற
பெண் நன்று, பீடு இலா மாந்தரின் பண் அழிந்து
ஆர்தலின் நன்று, பசித்தல், பசைந்தாரின்
தீர்தலின் தீப் புகுதல் நன்று.**

★ பண்ணோடு பொருந்திச் சரியாக இசைக்கப்படாத பாழிசையை விடப் பறையொலியே நல்லது.

★ பெருமை இல்லாத மனிதரைவிடக் கற்புப் பிறழாத பெண்மை மிக நல்லது.

★ உடலுக்குத் தீமைதரும் உணவினை உண்பதனைவிடப் பசியோடு இருப்பது நல்லது.

★ அன்பிற்கு உரியவரிடமிருந்து பிரிந்து உயிர்வாழ்வதனை விடத் தீப்பாய்ந்து இறத்தல் நல்லது.

தன்மதிப்பீட்டு வினா
15. தீப்புகுதல் நன்று - விளக்குக.

**9.2.4 வளப் பாத்தியுள் வளரும், வண்மை, கிளைக் குழாம் இன்சொற் குழியுள் இனிது எழூஉம், வன் சொல், கரவு எழூஉம், கண்இல் குழியுள், இரவு எழூஉம், இன்மைக் குழியுள் விரைந்து.**

★ நீர்வளம் நிறைந்த பாத்திபோல மனத்தை வைத்திருப்போரிடம் வள்ளன்மை உண்டாகும்.

★ இனிய சொல்லாகிய நிலத்திலிருந்து உறவினர்க்கு மகிழ்ச்சி விளையும்.

★ வஞ்சனையோடு கண்ணோட்டம் இல்லாத மனம் உடையாரிடமிருந்து வன்சொல் விளையும்.

★ ஏழைகளிடத்தில் யாசித்தல் உண்டாகும்.

**9.2.5 இன்னாமை வேண்டின், இரவு எழுக, இந்நிலத்து மன்னுதல் வேண்டின், இசைநடுக, தன்னொடு செல்வது வேண்டின் அறம் செய்க! வெல்வது வேண்டின் வெகுளி விடல்.**

தன்மதிப்பீட்டு வினா
16. இன்னாமை வேண்டின் யாது செய்யலாம்?

★ இழிவான செயல் எனப்படும் இன்னாமை வேண்டின் யாசிக்கலாம்.

★ இவ்வுலகில் நிலைபெற வேண்டுமானால் தொண்டு செய்து புகழ் பெற வேண்டும்.

★ நம்மைப் பிறர் புகழ வேண்டுமானால் அறம் செய்தல் வேண்டும்.

★ தம்மையும் பிறரையும் வெல்ல வேண்டுமானால் சினத்தை விடவேண்டும்.

தன்மதிப்பீட்டு வினா
15. தவக்குட்டம் நீந்துபவர் யார்?

**9.2.6 கடற் குட்டம் போழ்வர், கலவர்; படைக் குட்டம்**
**பாய்மா உடையான் உடைக்கிற்கும்; தோம் இல்**
**தவக் குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக் குட்டம்**
**கற்றால் கடந்து விடும்.**

★ மாலுமிகள் கடலின் ஆழத்தைக் கடப்பார்கள்.

★ வீரமறவர்கள் படைப் பெருக்கத்தை வெல்வர்.

★ தம்மை ஒருவழியில் நிறுத்தி நெறி நிற்பவர் குற்றமில்லாத தவ ஆழத்தைக் கடப்பர்.

★ நன்கு கற்ற அறிஞர்கள் அவையை வெல்வர்.

**9.2.7 பொய்த்தல் இறுவாய, நட்புக்கள், மெய்த்தாக**
**முத்தல் இறுவாய்த்து, இளநலம், தூக்கு இல்**
**மிகுதி இறுவாய், செல்வங்கள்; தம்தம்**
**தகுதி இறுவாய்த்து, உயிர்.**

★ ஒருவரோடு ஒருவர் பொய் கூறுவது நட்புக்கு முடிவாகும்.

★ உடலில் முதுமை தோன்றுவது இளமைக்கு முடிவாகும்.

★ வருமானத்திறகு மிஞ்சி செலவு செய்தல் செல்வநிலைக்கு முடிவாகும்.

★ . அவரவர் தகுதிக்கு இறுவாய் உயிர்போதல் ஆகும்.

தன்மதிப்பீட்டு வினா
16. மனைக்கு ஆக்கம் யார்?

**9.2.8 மனைக்கு ஆக்கம் மாண்ட மகளிர்; ஒருவன்**
**வினைக்கு ஆக்கம் செவ்வியன் ஆதல்; சினச் செவ்வேல்**
**நாட்டு ஆக்கம் நல்லன் இவ்வேந்து என்றல், கேட்டு ஆக்கம்**
**கேளிர் ஒரீஇ விடல்.**

★ நற்பண்புடைய பெண்கள் இருப்பது வீட்டிறகு ஆக்கம்.

★ ஒருவர் சிறந்த பண்புடையவராக இருப்பது உயர் வினைக்கு ஆக்கம்.

★ நாட்டை ஆளும் அரசன் நல்லவனாக இருப்பது நாட்டிற்கு ஆக்கம்.

★ நல்ல உறவினரை ஒதுக்கி விடுதல் கேடாகிய தீமைக்கு ஆக்கம்.

**9.2.9 பெற்றான் அதிர்ப்பின், பிணை அன்னாள்தான் அதிர்க்கும், கற்றான் அதிர்ப்பின் பொருள் அதிர்க்கும்; பற்றிய மண் அதிர்ப்பின், மன்னவன் கோல் அதிர்க்கும், பண் அதிர்ப்பின் பாடல் அதிர்ந்து விடும்.**

★ கணவன் கலங்கினால், மானைப் போன்ற மனையாளும் கலங்குவாள்.

★ கற்றறிந்த அறிஞன் கலங்கினால், அவன் தெரிவிக்கும் கருத்துக்களும் கலங்கும்.

★ மண்ணின் மைந்தராம் மக்கள் கலங்கினால், அரசனும் அவனது ஆட்சியும் கலங்கும்.

★ இசைக்கப்படும் பண் கலங்கினால், அதனோடு இசைந்த பாடலும் கலங்கும்.

தன்மதிப்பீட்டு வினா

17. மன்னவன் கோல் ஏன் கலங்கும்?

**9.2.10 மனைக்குப் பாழ், வாணுதல் இன்மை; தான் செல்லும் திசைக்குப் பாழ், நட்டோரை இன்மை; இருந்த அவைக்குப் பாழ், மூத்தோரை இன்மை; தனக்குப் பாழ் கற்ற அறிவுஇல்லா உடம்பு.**

★ இல்வாழ்க்கைக்குப் பாழ் நல்ல மனைவி வாய்க்காமை.

★ ஒருவர் செல்லும் ஊருக்குப் பாழ் நண்பர்கள் எவரும் அங்கு இல்லாமை

★ அறிஞர்கள் கூடியிருக்கும் அவைக்குப் பாழ் மூத்த அறிஞர்கள் அவையில் இல்லாதிருத்தல்.

★ தனக்குத்தானே பாழ் படிப்பறிவு இல்லாது இருத்தல்.

தன்மதிப்பீட்டு வினா

18. அவைக்குப் பாழ் எது?

## தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 9.0.4 | 7. | 9.1.5 |
| 2. | 9.1.0 | 8. | 9.1.6 |
| 3. | 9.1.1 | 9. | 9.1.7 |
| 4. | 9.1.2 | 10. | 9.1.8 |
| 5. | 9.1.3 | 11. | 9.1.9 |
| 6. | 9.1.4 | 12. | 9.1.10 |

| | | | |
|---|---|---|---|
| 13. | 9.2.1 | 17. | 9.2.6 |
| 14. | 9.2.2 | 18. | 9.2.8 |
| 15. | 9.2.3 | 19. | 9.2.9 |
| 16. | 9.2.5 | 20. | 9.2.10 |

## 9.4 வினாக்கள்

1. நான்மணிக்கடிகை - குறிப்பு வரைக.
2. திருமாலின் சிறப்புகளாக நான்மணிக்கடிகை கூறுவன யாவை?
3. 'எள்ளற்க என்றும் எளியர் என்று!' - விளக்குக.
4. சான்றோர் சால்பு எத்தகையது?
5. நற்குடிப் பிறப்புப் பற்றிக் கடிகை கூறுவன யாவை?
6. யாரார் துயிலின்றி இருப்பர்? ஏன்?
7. அணிகளாக அமைபவை எவையெவை? உரைக்க.
8. யார் யார் எவ்வாறு நோய் செய்வர்?
9. 'வெல்வது வேண்டின் வெகுளிவிடல்!' - விளக்குக.
10. கடக்கக்கூடிய ஆழங்கள் பற்றி விளக்குக.
11. மனை, வினை, நாடு, கேடு முதலியவற்றிற்கு ஆக்கம் தருபவை எவை?
12. பாழாவன யாவை? விளக்குக.
13. செய்யுள்தோறும் நான்கு கருத்துக்கள் உள்ளன என்பதனை எவையேனும் சில நான்மணிக்கடிகைச் செய்யுள் வழி விளக்குக.
14. நான்மணிக்கடிகையுள் கருத்துக்கள் மணியானவை என்பதனைச் சான்றுடன் விளக்குக.
15. நான்மணிக் கடிகையின் செய்யுள் திறத்தைச் சான்றுடன் விளக்குக.

# அலகு 10 மூதுரை

**அறிமுகம் :**

அவ்வையார் பாடிய மூதுரைப் பாடல்களின் கருத்துக்கள், எளிமை, வாழ்வியல் செய்திகள் உவமையாதல் ஆகியவற்றை விளக்குவதாக இப்பாடம் அமைகிறது.

**நோக்கம் :**

1. அவ்வையார் பாடிய மூதுரையின் சிறப்பினையும், பிற நூல்கள் எவை என்பதனையும் அறிதல்.
2. எளிமையும் இனிமையும் உடைய மூதுரைப் பாடல்களில் அன்றாட வாழ்வின் விழுமியங்கள் அமைந்துள்ளமையை அறிதல்.

## பாட அமைப்பு :

10.0 மூதுரை அறிமுகம்.

10.1 மூதுரை – முதல் பாடல் தொடங்கி பத்தாம் பாடல் வரை.

10.2 மூதுரை – பதினோராம் பாடல் தொடங்கி 20ஆம் பாடல் வரை

10.3 தன்மதிப்பீட்டு வினா–விடைக் குறிப்புகள்.

10.4 வினாக்கள்.

## 10.0 மூதுரை அறிமுகம் :

### 10.0.1 'கூழுக்காகக் கவி பாடும் - கூனக் கிழவி அவள்'

எனப் பலரும் போற்றும் பைந்தமிழ்ப் புலவர் ஔவையார். தமிழ்நாட்டின் தலைமைப் பெண் புலவர்.

### 10.0.2

சங்க இலக்கிய ஔவையார், கம்பர் கால ஔவையார், பிற்கால ஔவையார் எனப் பலகாலத்துக்கும் ஔவையார் பலர் இருந்தனர்.

### 10.0.3

பெரிய பெரிய அறக்கருத்துக்களை எல்லாம் எளிமையாக எடுத்துரைக்கிறார். அவர் இயற்றிய ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, ஞானக்குறள், அசதிக்கோவை ஆகிய நூல்கள் தமிழுக்குப் பெருமை அளிக்கக் கூடியவை.

### 10.0.4

தன்மதிப்பீட்டு வினா
1. அவ்வையார் படைப்புக்கள் சிலவற்றைக் குறிப்பிடுக.

ஔவையாரின் ஆத்திசூடியும் கொன்றை வேந்தனும் அகரத்தில் தொடங்கிச் சூத்திரம் போல அமைந்தவை.

### 10.05

ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி ஆகிய நான்கும் எளிமையானவை.

தமிழ்கூறும் நல்லுலகம் உள்ளவரை ஔவையின் அரும்பாடல்கள் நின்று நிலவும்.

### 10.0.6

விநாயகரைப் போற்றித் துதிக்கும் கடவுள் வாழ்த்துப் பாடலோடு தொடங்குகிறது மூதுரை. முப்பது பாடல்களைக் கொண்டு இலங்குகிறது இந்நூல்.

## 10.1.0 கடவுள் வாழ்த்து :

**வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்**
**நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு**
**துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதம்**
**தப்பாமல் சார்வார் தமக்கு.**

தினந்தோறும் மலர்களைக் கொண்டு பவளம் போல் சிவந்த திருமேனியையும் தும்பிக்கையையும் உடைய விநாயகப் பெருமான் திருவடிகளைத் தொழுபவருக்கு சொல்வளம் உண்டாகும்.

தன்மதிப்பீட்டு வினா
2. 'வளர்தெங்கு' உணர்த்தும் உண்மை யாது?

**10.1.1 நன்றி ஒருவக்குச் செய்தக்கால் அந்நன்றி**
**என்று தருங்கொல்? என வேண்டா - நின்று**
**தளரா வளர் தெங்கு தாள் உண்ட நீரைத்**
**தலையாலே தான் தருதலால்.**

தென்னை மரத்துக்கு வேரில் நீர் பாய்ச்சுகிறோம். சுவையுடைய இளநீர் மேலே காய்க்கிறது. அதுபோல நற்குணம் உள்ள ஒருவருக்கு நன்மை செய்தால் நமக்கு நன்மையே உண்டாகும். பதிலுக்கு உதவியை எதிர்பார்த்து எதனையும் செய்ய வேண்டாம்.

**10.1.2 நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்**
**கல்மேல் எழுத்துப் போல் காணுமே - அல்லாத**
**ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்**
**நீர்மேல் எழுத்துக்கு நேர்.**

தன்மதிப்பீட்டு வினா
3. கல்மேல் எழுத்தாவது எது?

நல்லவருக்குச் செய்த உதவி, கல்லிலே செதுக்கப்பட்டது போல் நிலையாக விளங்கும். இரக்கமற்றவருக்குச் செய்த உதவியானது தண்ணீரிலே எழுதிய எழுத்தைப் போல் அப்பொழுதே அழிந்துவிடும்.

**10.1.3 இன்னா இளமை வறுமை வந்து எய்தியக்கால்**
**இன்னா அளவில் இனியவும் - இன்னாத**
**நாள் அல்லா நாள் பூத்த நன்மலரும் போலுமே**
**ஆள் இல்லா மங்கைக்கு அழகு.**

வாலிபத்தில் வறுமையும் முதுமையில் செல்வமும் உண்டானால் அதனால் துன்பமே விளையும்; இன்பத்தைக் காண இயலாது. தேவை இல்லாபோது மலரை யார் சூடிக் கொள்வர்? கணவனைப் பெற்றிராத மங்கை என்னதான் அழகோடு திகழ்ந்தாலும் அதனால் பயன் என்ன?

**10.1.4 சுட்டாலும் பால் சுவையில் குன்றாது அளவளாய்**
**நட்டாலும் நண்பு அல்லார் நண்பு அல்லர்**
**கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு**
**சுட்டாலும் வெண்மை தரும்.**

தன்மதிப்பீட்டு வினா
4. 'கெட்டாலும் மேன்மக்கள் மேன் மக்களே!' - விளக்குக.

பாலை எவ்வளவு காய்ச்சினாலும் அதன் சுவை குறையாது. சங்கைச் சுட்டாலும் அதன் நிறம் வெண்மையாகவே காணப்படும். பண்புடைய மேலோர்கள் வறுமையில் வாடிய போதிலும் தங்கள் தகுதியை இழக்கமாட்டார்கள். பண்பற்றவர்கள் நெருங்கிப் பழகினாலும் நல்ல நண்பர்களாக இருக்க மாட்டார்கள்.

**10.1.5 அடுத்து முயன்றாலும் ஆகும் நாள் அன்றி**
**எடுத்த கருமங்கள் ஆகா - தொடுத்த**
**உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்**
**பருவத்தால் அன்றிப் பழா.**

தன்மதிப்பீட்டு வினா
5. பருவத்தால் பலன் தருவன யாவை?

நீண்டு உயர்ந்த மரங்கள் ஆனாலும் தகுந்த பருவ காலத்திலே பழங்களை அளிக்கும்; என்னதான் அடிக்கடி முயன்றபோதிலும் மேற்கொண்ட காரியங்கள் ஆகும் காலத்திலேதான் கைகூடும்.

**10.1.6 உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்**
**பற்றலரைக் கண்டால் பணிவரோ? - கல்தூண்**
**பிளந்து இறுவது அல்லால் பெரும் பாரம் தாங்கின்**
**தளர்ந்து வளையுமோ தான்.**

கருங்கல் தூணான போதிலும் அதிகமான பாரத்தைச் சுமத்தினால் அது முறிந்து உடைவது போல, மானம் உள்ளோர் விரோதிகளைக் கண்டு பயந்து வணங்காமல் உயிரையே விட்டு விடக்கூடிய இயல்புடையர்கள் ஆவார்கள்.

**10.1.7 நீர் அளவே ஆகுமாம் நீர் ஆம்பல், தான்கற்ற**
**நூல் அளவே ஆகுமாம் நுண்அறிவு - மேலைத்**
**தவத்து அளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்**
**குலத்து அளவே ஆகும் குணம்.**

தன்மதிப்பீட்டு வினா
6. நீர் அளவே ஆவது எது?

அல்லி தண்ணீர் அளவுக்குத் தகுந்தபடி உயர்ந்து வளரும். ('வெள்ளத்தனைய மலர் நீட்டம்' என்பது குறள்) ஒருவர் படித்த நூல்களின் தரத்திற்கு ஏற்பக் கல்வி அமையும். செல்வமும் நல்வினையை ஒட்டியே இருக்கும். குணமும் குடும்பத்தை அனுசரித்தே காணப்படும்.

**10.1.8 நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலம்மிக்க**
**நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே - நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் நன்று.**

தன்மதிப்பீட்டு வினா
7. எவையெல்லாம் நன்று?

நல்ல குணம் உள்ளவரைக் காண்பதும், அவர் சொல்லைக் கேட்பதும் அவரது நற்குணங்களை உரைப்பதும் அவர்களோடு இணைந்து இருப்பதும் ஆகிய அனைத்தும் நன்மை தரும்.

**10.1.9 தீயாரைக் காண்பதுவும் தீதே; திருஅற்ற**
**தீயார் சொல் கேட்பதுவும் தீதே; தீயார்**
**குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் தீது.**

கெட்ட குணத்தவரைக்க காண்பது, அவர்தம் பயனற்ற மொழிகளைக் கேட்பது, அவருடைய கெட்ட குணங்களைப் பேசுவது, அத்தகையவரோடு சேர்ந்து இருப்பது யாவுமே தீமையை உண்டாக்கும்.

தன்மதிப்பீட்டு வினா
8. எவையெல்லாம் தீது?

**10.1.10 நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழிஓடிப்**
**புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் - தொல் உலகில்**
**நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை.**

நெற்பயிருக்கு இறைத்த தண்ணீரானது வாய்க்கால் வழியாகச் சென்று புல்லுக்கும் பயனாகும். அதுபோல நல்லவர் ஒருவர் காரணமாகப் பொழியும் மழையானது மற்ற அனைவருக்கும் பயன்படுகிறது.

தன்மதிப்பீட்டு வினா
9. புல்லுக்கு நீர் எவ்வாறு கிடைக்கும்?

**10.2.1 பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்**
**விண்டு உமிபோனால் முளையாதாம் - கொண்டபேர்**
**ஆற்றல் உடையார்க்கு ஆகாது அளவு இன்றி**
**ஏற்ற கருமம் செயல்.**

அரிசி விளைவதற்கு உமியின் துணை தேவைப்படுகிறது. ஒரு காரியத்தைச் செய்து முடிக்க எவ்வளவு திறமை இருந்த போதிலும், தகுந்த ஒருவர் துணை இல்லாமல், அதனைத் தனியாகச் செய்ய முடியாது.

தன்மதிப்பீட்டு வினா
10. அரிசி முறைப்பதற்கு எது உதவுகிறது?

**10.2.2 மடல் பெரிது தாழை; மகிழ் இனிது கந்தம்**
**உடல் சிறியர் என்று இருக்க வேண்டா - கடல்பெரிது**
**மண்ணீரும் ஆகாது; அதன் அருகே சிற்றூறல்**
**உண்ணீரும் ஆகி விடும்.**

தாழம்பூவின் மடல் பெரியது. ஆனால், அளவில் சிறிய மகிழம்பூவின் மணம் பெரியதாகும். கடலின் அளவு பெரிதாக இருப்பினும் அதன் நீர் அழுக்கைப் போக்கக்கூட உதவாது. அக்கடலின் அருகில் உள்ள ஊற்றுநீர் அளவில் சிறிது என்றாலும் குடிப்பதற்கு உபயோகம் ஆகும். சிறிய உருவமாக இருந்தாலும் அவரை மதியாமல் இருக்க வேண்டாம்.

தன்மதிப்பீட்டு வினா
11. மடலில் பெரியது எது? மணத்தில் பெரியது எது?

**10.2.3 கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்**
**அவையல்ல நல்ல மரங்கள் - சபை நடுவே**
**நீட்டு ஓலை வாசியா நின்றான் குறிப்பு அறிய**
**மாட்டாதவன் நன் மரம்.**

கல்வியறிவுடையோர் நிறைந்த சபையில் ஒருவர் கொடுக்கும் ஓலைச்சுவடியைப் படிக்கத் தெரியாதவனும் பிறரது உள்ளக் குறிப்பை உணராமல் நிற்பவனும் கொம்பு கிளைகளுடன் காட்டில் நிற்கும் மரம் போன்றவன் ஆவான்.

தன்மதிப்பீட்டு வினா
12. நன்மரம் எவன்?

தன்மதிப்பீட்டு வினா
13. மயிலாட ஆடும் பறவை எது?

**10.2.4 கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி**
**தானும் அதுவாகப் பாவித்து - தானும்தன்**
**பொல்லாச் சிறகை விரித்து ஆடினால் போலுமே**
**கல்லாதான் கற்ற கவி.**

முறையாகக் கல்வி கற்காமல், கற்ற வரைப் போல் பாசாங்கு செய்வது, தோகைவிரித்து ஆடும் மயிலைப் பார்த்துத் தானும் மயில்போல என எண்ணி வான்கோழி தன்னுடைய சிறகை விரித்து ஆடுவது போலாகும்.

**10.2.5 வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி**
**ஆங்கு அதனுக்கு ஆகாரம் ஆனால்போல் - பாங்கு அழியாப்**
**புல் அறிவாளருக்குச் செய்த உபகாரம்**
**கல்லின் மேல் இட்டகலம்.**

தன்மதிப்பீட்டு வினா
14. கல்லின் மேல் போட்ட கலம் போன்றது எது?

பாம்பு கடித்த வரிப்புலிக்கு வைத்தியம் செய்த வைத்தியன் அப்போதே அப்புலிக்கு இரையானது போல அற்பப்புத்தி உடையவருக்கு உதவிசெய்தால் கல்லின்மேல் போட்ட மட்பாண்டம் போல நமக்கே அது தீமையாக முடியும்.

**10.2.6 அடக்கம் உடையார் அறிவிலர் என்று எண்ணிக்**
**கடக்கக் கருதவும் வேண்டா - மடைத் தலையில்**
**ஓடுமின் ஓட உறுமீன் வரும் அளவும்**
**வாடி இருக்குமாம் கொக்கு.**

தன்மதிப்பீட்டு வினா
15. ஓடுமீன் ஓட வாடி நிற்பது எது?

ஓடையில் சிறு மீன்கள் ஓடும் போது விட்டுவிட்டு, பெரிய மீனாக வருவதைக் கொத்திப் பிடிப்பதற்காகக் கொக்கு அடங்கி இருக்கும். அதுபோல அடக்கமாக இருப்பவர் அறிவற்றவர் என்று அவரை அலட்சியமாக எண்ணுதல் கூடாது.

**10.2.7 அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்**
**உற்றுழித் தீர்வார் உறவு அல்லர்; - அக்குளத்தில்**
**கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே**
**ஒட்டி உறுவார் உறவு.**

தன்மதிப்பீட்டு வினா
16. நீரற்ற குளத்தில் இருப்பது எது? பறப்பது எது?

தண்ணீர் உள்ள குளத்தில் கொட்டி, ஆம்பல், நெய்தல் ஆகியன முளைத்துள்ளன; நீர்ப் பறவைகளும் உள்ளன. குளத்தில் நீர் வற்றினால், பறவைகள் எல்லாம் பறந்து விடுகின்றன. ஆனால், மலர்கள் மட்டும் வாடிக் கிடக்கின்றன. அதுபோல, வாழ்விலும் தாழ்விலும் நீங்காமல் சேர்ந்து இருப்பவரே உண்மையான உறவினர் ஆவார்.

**10.2.8 சீரியர் கெட்டாலும் சீரியரே; சீரியர் மற்று
அல்லாதார் கெட்டால் அங்கு என்னாகும்? - சீரிய
பொன்னின் குடம் உடைந்தால் பொன்னாகும் என்ஆகும்
மண்ணின் குடம் உடைந்தக் கால்?**

தன்மதிப்பீட்டு வினா 17. பொன்குடம் உடைந்தால் என்னாகும்?

சிறப்புமிக்கவர் வறுமையில் வாடியபோதிலும் அவர்களுடைய சிறப்புக் குன்றாது; பண்பற்றவர்கள் கெட்டால் அவர்கள் கதி என்ன ஆகும்? தங்கக்குடம் உடைந்துவிடுமானால் மறுபடியும் தங்கமாகிவிடும். மண்குடம் உடைந்தால் என்ன பயன்?

**10.2.9 ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்
நாழி முகவாது நானாழி - தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன்.**

கடலிலுள்ள நீரில் எவ்வளவுதான் அமிழ்த்தி மொண்டாலும் ஒருபடி அளவில் நான்குபடி கொள்ளாது. செல்வமும் கணவனும் ஒரு பெண்ணுக்குக் கிடைத்த போதிலும் அவள் விதிப்படியேதான் வாழ்வு அமையும்.

**10.2.10 உடன் பிறந்தார் சுற்றத்தார் என்று இருக்கவேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி -உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம் மருந்து போல்வாரும் உண்டு.**

தன்மதிப்பீட்டு வினா 18. உடன்பிறந்தே கொல்வது எது?

உடலில் தோன்றிய நோயே அதனைக் கொல்லுகின்றது. அதனைப் போல உடன்பிறந்தவர்களை உதவி புரியும் உறவினர் என எண்ண வேண்டாம். பெரிய மலையில் உள்ள மூலிகை உயிரைக் காப்பதுபோல, யாரோ ஒருவர் உதவி செய்வர்.

## தன்மதிப்பீட்டு வினா-விடைக் குறிப்புகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | 10.0.3 | 8. | 10.1.9 |
| 2. | 10.1.1 | 9. | 10.1.10 |
| 3. | 10.1.2 | 10. | 10.2.1 |
| 4. | 10.1.4 | 11. | 10.2.2 |
| 5. | 10.1.5 | 12. | 10.2.3 |
| 6. | 10.1.7 | 13. | 10.2.4 |
| 7. | 10.1.8 | 14. | 10.2.5 |
| | | 15. | 10.2.6 |

## 10.4 வினாக்கள்

1. ஔவையார் – குறிப்பு வரைக
2. மூதுரை – குறிப்பு வரைக.
3. வளர்தெங்கு உரைக்கும் உண்மையாது?
4. நீர்மேல் எழுத்து எது?
5. சுட்டாலும் வெண்மைதரும் சங்கு உணர்த்துவது எது?
6. கல்தூன் வழி அவ்வையார் உணர்த்தும் உண்மை யாது?
7. நன்மை, தீமை எவையென மூதுரை உரைக்கிறது?
8. எல்லார்க்கும் பெய்யும் மழை – விளக்குக.
9. பெரியது; சிறியது வழி மூதுரை உரைக்கும் உண்மை யாது?
10. 'நல்லமரம்' எதுவென மூதுரை குறிக்கிறது?
11. கல்லாதான் கற்றகவி எத்தகையது?
12. கொக்கின் வழி புலனாகும் கருத்து யாது?
13. 'அற்றகுளம்' புலப்படுத்தும் செய்தி என்ன?
14. பொற்குடம், மட்குடம் உணர்த்துவன எவை?
15. விதியின் பயனாக அவ்வை என்ன உரைக்கிறார்?
16. மூதுரைச் செய்யுட்களின் அமைப்பையும் சிறப்பையும் தக்க சான்றுகள் வழி விளக்குக.

# மாதிரி வினாத்தாள்

நேரம் : மூன்று மணி மதிப்பெண் : 100 மதிப்பெண்கள்

அனைத்து வினாக்களுக்கும் விடையளி

பகுதி அ (10x1=10 மதிப்பெண்கள்)

ஒரு சொல் / தொடரில் விடைதருக.

1. முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு எவ்வாறு கருதப்படுவான்?
2. பகலில் கூகையை வெல்லும் பறவை எது?
3. மின்னல் போலத் தோன்றி மறைவது எது?
4. இன்னினியே செய்ய வேண்டியது எது?
5. நகரம் ஏன் காடாகிறது?
6. பாம்புக் கொடி உடையவன் யார்?
7. நான்மணிக்கடிகையின் ஆசிரியர் யார்?
8. குளத்துக்கு அணி எது?
9. சுட்டாலும் வெண்மையாக இருப்பது எது?
10. குளத்தில் நீர் வற்றினாலும் இருப்பது எது?

பகுதி ஆ (5x3=15)

ஒருபத்தி அளவில் விடைதருக.

11. (அ) அரசனுக்குரிய பொருமைகளைக் குறிப்பிடுக.

அல்லது

(ஆ) காலம் அறிந்து செயல்படுதல் குறித்து எழுதுக.

12. (அ) சகடக்கால் போல ஓடக்கூடியதாக நாலடியார் எதனைக் குறப்பிடுகிறது?

(அல்லது)

(ஆ) பலிகடா மூலம் நாலடியார் உணர்த்துவது எது?

13. (அ) நற்குடிப்பிறப்புப் பற்றிக் கடிகை உரைப்பன யாவை?

(அல்லது)

இன்மைக் குழியுள் விரைந்து எழுவது எது?

14. (அ) 'கனா முந்துறாத வினை' – பழமொழி விளக்கும் உண்மை யாது?

(அல்லது)

(ஆ) 'நாய் நட்டால் நல்ல முயல்!' உணர்த்தும் கருத்து யாது?

15. (அ) மூதுரை – குறிப்பு வரைக.

(அல்லது)

(ஆ) மருந்து போல்வார் யார்?

பகுதி இ (5x6=30)

**ஒரு பக்க அளவில் விடை தருக.**

16. (அ) கேள்வியின் சிறப்பை விளக்குக.

அல்லது

(ஆ) இடனறிதலின் இன்றியமையாமையை உரைக்க.

17. (அ) செல்வநிலையாமை குறித்து நாலடியார் கூறுவன யாவை?

அல்லது

(ஆ) நாலடியார் எவ்வாறு அறச்செயலை வலியுறுத்துகிறது? விளக்குக.

18. (அ) 'வேள்வாய்க் கவட்டை நெறி!' – பழமொழி உணர்த்தும் உண்மை எது?

அல்லது

(ஆ) பழமொழிச் செய்யுட்களின் சிறப்பை இரு சான்று கொண்டு விளக்குக.

19. (அ) கேளிரால் ஆன பயன் யாது? விளக்குக.

அல்லது

(ஆ) ஆக்கம் தருவன பற்றிக் கடிகை கூறுவன யாவை?

20. (அ) நீர் மேல் எழுத்து எது? விளக்குக.

அல்லது

(ஆ) விதியின் பயனாக அவ்வை உரைப்பன யாவை?

## பிரிவு ஈ (15x3=45)

கட்டுரை வடிவில் விடை தருக.

21. (அ) திருக்குறளின் கல்விக் கோட்பாடு பற்றிக் கட்டுரை வரைக.

அல்லது

(ஆ) வலிமை, காலம், இடம் அறிதல் பற்றிய திருக்குறள் சிந்தனைகளை உரைக்க.

22. (அ) நாலடியார் துறவறத்தை எங்ஙனம் எடுத்தியம்புகிறது?

அல்லது

(ஆ) நான் மணிக்கடிகைச் செய்யுளில் நான்கு கருத்துக்கள் உள்ளமையைச் சான்றுடன் விவரி.

23. (அ) பழமொழி வழி முன்றுறையரையனார் புலப்படுத்தும் அறங்களை விளக்குக.

அல்லது

(ஆ) மூதுரையின் எளிமையையும் கருத்துச் செறிவையும் தக்க சான்றுகளின் வழி விவரி.